# சடங்குகளின் கதை

(இந்துமதம் எங்கே போகிறது? பாகம்-2)

-அக்னிஹோத்ரம்
ராமானுஜ தாத்தாச்சாரியார்



## சமர்ப்பணம்

உண்மையைத் தேடும்

தமிழ் அறிவுலகத்துக்கு!

# முன்னுரை

வருங்காலத்தின் வேர்களே....!

சுருதி ஸ்மிருதி இதிஹாஸ
புராண மீமாம்ஸாத்வாய ஸூத்ரவிஸாரத
வேதார்த்த ரத்னாகர வேதவாசஸ்பதி

மஹோபாத்யாய
மஹாமஹோபாத்யாய
அக்னிஹோத்ரம்
ராமானுஜ தாத்தாச்சாரியார்

இந்து மதம் எங்கே போகிறது என்ற தொடர் மூலம் நக்கீரன் வாசகர்களுடன் பேசிக் கொண்டிருந்த எனக்கு... இப்போது இன்னொரு புதிய அவதாரமாய்... நக்கீரனின் இணைய தள (nakkheeeran.com) வாசகர்களுடன் உலகம் தழுவிய அளவில் பேசுவது மிகுந்த சந்தோஷம் அளிக்கிறது. நமது மதம் எவ்வாறு தோன்றி வளர்ந்து வாழ்ந்து வருகிறது என்பதை எனது அறிவைக் கொண்டு அளந்து சொன்ன நான்...

இப்போது 'சடங்குகளின் கதை' என்ற பொருளை எடுத்துக் கொண்டிருக்கிறேன்.

அதாவது... நமது மதமானது சடங்குகளால் தான் கட்டப்பட்டிருக்கிறது. இன்றும் மக்களிடையே சடங்குகள் சாஸ்வதமாய் இருக்கின்ற காரணத்தால்தான் மதம்... தனது தாத்பர்ய தத்வ சக்தியை வைத்துக் கொண்டு ஜீவித்திருக்க முடிகிறது.



ஆனால்... இன்றைக்கு பின்பற்றப்படும் சடங்குகளுக்கு காரணம் இருக்கிறதா?... ஏன் இதைச்செய்கிறோம் என பின்பற்றுபவர்கள் தெரிந்து கொண்டுள்ளார்களா?...

சடங்குகளை செய்து வைக்கும் பிராமணர்களுக்கே இந்த சடங்கு எதற்கு என்று தெரியவில்லையே?...

அதனால்... உங்களைச் சுற்றி நீங்கள் செய்கிற, உங் களுக்காக செய்விக்கப்படுகிற சடங்குகளின் காரணங் களை கண்டுபிடிக்கத்தான் இந்த பயணம்.

பிராமணன் கடல் கடந்தால் பாவம் என ஒரு கருத்து பிராமண்யத்தில் உண்டு. கடல் தாண்டி வரும் எனது கருத்துக்கள் உங்களை சேர்ந்து உங்களுக்கு விழிப்பு ணர்வை ஏற்படுத்தினால்... எனது இப்போதைய 100-வது வயதில் எனக்கு மேலும் புண்ணியமே என்ற நம்பிக்கை யில் இப்பயணத்தை தொடங்குகிறேன்.

சமீபத்தில் நாவல்பாக்கம் என்கிற ஊருக்கு என் இஷ்ட மித்ர பந்து ஒருவரின் சதாபிஷேகத்துக்காக சென்றிருந் தேன். அப்போது அங்கே என்னை சந்தித்த அநேகரும்... "நீர் என்ன நெனைச்சுண்டிருக்கீர்? ஹிந்து மதத்தை கேவலப்படுத்துறதுனு முடிவு பண்ணிட்டீரா? அதுவும் நக்கீரன்குற ஒரு பத்திரிகையில இப்படியெல்லாம் எழு தறது அபாண்டம்..." என போர்க்கொடி தூக்கினர்.

நான் கேட்டேன். "நக்கீரன் யார்? போக்கிரியா?... ஜன விரோதியா?... அவன் ஜனங்களுக்கெல்லாம் உண்மைய எடுத்துச் சொல்றான். நான் புஸ்தகங்கள்ல நம்ம முன்னோர்கள் எழுதின விஷயத்தைதான் எடுத்துச் சொல்றேன். நக்கீரன்ல அதை எழுதறா... இதுல என்னடா தப்பு இருக்கு?"னு கேட்டேன்.

பேசாம வாயை மூடிண்டு போயிட்டானுங்க. நக்கீரன் பத்திரிகையின் எடிட்டர் என்னைப் பார்க்க அவரது தம்பிகளோடு வந்திருக்கார். அப்போது அவர்கிட்ட சொன்னேன்.

மத்தவன் சொல்ல பயப்படற விஷயங்களை நீ சொல்றே... ரொம்ப தைரியமா சொல்றே. நான் உனக்கு ஹெல்ப் பண்றேன் அவ்வளவுதான். நீ மகாபுருஷன்னு அவருக்கு ஆசீர்வாதம் செஞ்சேன்.

உண்மை அதுதான். நக்கீரன் பத்திரிகையில் என் கருத்துக்கள் தொடர்ந்து வந்தபோது... பலபேர் என்னை மிரட்டினார்கள். பகவானும், நக்கீரனும் சேர்ந்து என்னை தைரியப்படுத்தினார்கள்.

வேதம் சொல்கிறது சத்யம்தான் பிரதானம் என்று. நான் சத்யத்தை சொல்கிறேன்.

இதற்கு கருத்துக்குக் கருத்து என எதிர்ப்பு தெரிவிக்காமல் சிலர் என்னை தனிப்பட்ட முறையில் விமர்சனம் செய்கிறார்கள்.

நான் நேருஜியோடு பழகியுள்ளேன். காந்தியாரோடு பழகியுள்ளேன். மகா பெரியவர் சங்கராச்சாரியாரோடு பழகியிருக்கிறேன். இதெல்லாம் எனது பாக்யம்... மகா பெரியவர்... பெண்களை "வருங்காலத்தின் வேர்கள்' என குறிப்பிட்டார்.

அதுபோல... நான் இப்போது உலகம் முழுதும் உள்ள தமிழ் அன்பர்களோடு இப்போது பழகி வருகிறேன். நீங்கள் எல்லாருமே வருங்காலத்தின் வேர்கள்தான்.

மத சம்பந்தமான விழிப்புணர்வை பெற்று... வேர்களே நீங்கள் முளைவிட்டு இலை விட்டு பிஞ்சு விட்டு... காய் விட்டு... கனி விட்டு விருட்சமாகுங்கள். லோகத்தை காக்கின்ற விருட்சமாகுங்கள். ஆசிர்வாதம்.

(அக்னிஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார்)

## பதிப்புரை

### தத்துவப் புதையல்

நம் நக்கீரன் வாசகர்களுக்கு நன்கு பரிச்சயமான ஆன்மீகப் பெரியவர் அக்னி ஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார் அவர்கள் 'சடங்குகளின் கதை' என்கிற கருத்துப் பெட்டகத்தை இந்துமதம் எங்கே போகிறது 2-ம் பாகமாக இங்கே தத்துவ ஆலாபனைகளோடு தமிழுலகத்திற்குத் தருகிறார்.

வேத சூட்சுமங்கள் பலவற்றையும் கற்று... இன்று பழுத்த ஆன்மீகப் பழமாய் 2007 ஏப்ரல் 8-ல் நூறு வயதைத் தொடும் தாத்தாச்சாரியார் அவர்கள்... காவிரி தீரமான குடந்தையில்... ஒரு ஆச்சாரமான வைணவக் குடும்பத்தில் பிறந்தவர்.

கேள்விகள் மறுக்கப்பட்ட வைதீகத்திற்குள்அதிரடிக் கேள்விகளை எழுப்பியபடியே வர்ணாசிரமவாதிகள் பலரின் முகமூடிகளைக் கிழித்தவர்இவர். வேதாபி மானி களாலும், உண்மையான ஞானமார்க்கத்தினரா லும் மதிக்கப்படும் நம் தாத்தாச்சாரியாரின் அறிவின் வீச்சை... உரிய முறையில் நக்கீரன் 'இந்துமதம் எங்கே போகிறது' என்கிற புரட்சித் தொடர் மூலம் வாசகர் பரப் பிற்குக் கொண்டு வந்தது.

இது, நூல் வடிவம் பெற்றபோதும் தமிழ் வாசகர் உல கத்தின் ஏகோபித்த வரவேற்புக்கு ஆளாக... அது இப் போது நவீனமான மூன்றாம் பதிப்பை எட்டியிருக்கி றது. இதுவே தாத்தாச்சாரியாரின் தமிழுக்கும், ஞானத் திற்கும் தத்துவ வழிகாட்டல்களுக்கும் கிடைத்திருக்கிற வெற்றியாகும்.

நக்கீரன், சமுதாயம் சார்ந்த விழிப்பையும், அரசியல் சார்ந்த விழிப்பையும், பாலியல் சார்ந்த விழிப்பையும் தொடர்ந்து தந்து கொண்டிருந்த நிலையில் ஆன்மீக ரீதியிலும் விழிப்பை ஏற்படுத்த வேண்டும் என முடிவெ டுத்தபோது...

இனிய தம்பி நக்கீரன் இணையாசிரியர் காமராஜ், "இந்த முயற்சிக்கு பொருத்தமானவர் தாத்தாச்சாரியார்தான்" என்று என்னிடம் சொன்னார். இது அபாரத் தேர்வு. இந்த அபாரத்தேர்வை வாசகர்கள் தங்களின் ஏகோ பித்த ஆதரவின் மூலம் அங்கீகரித்தார்கள்.

காரணம் தாத்தாச்சாரியாரின் பார்வை ஆராதிக்க வேண்டிய அதிரடிப் பார்வையாக இருந்தது தான். ஆன் மீகத்திலும் மதம் சார்ந்த எண்ணங்களிலும் வேதங்களி லும் தத்துவங்களிலும் ஊறிப் போன அவருக்குள்... இது

சரியா... அது சரியா என்று அலசி ஆராய்கிற பகுத்தறிவு வேட்கை அதிகமாகவே இருந்தது.

எனவேதான் வேதங்களிலேயே வேண்டாத வேதம் எது? சரியான வேதம் எது? என தைரியமாக அவரால் முடிவெடுத்து அறிவிக்க முடிந்தது.

வேதத்தில் சொல்லப்பட்டவை எல்லாமும் சரி என வாதாடாமல்...

'ஸ்த்ரீனாந்த சூத்ர ஜாதீனாம்' என ஸ்த்ரீ எனப்படும் பெண்களும் மனிதர்களில் சூத்திரர்களுக்குச் சமமான கீழோர்கள்தான்' என்கிற 'மனு' தர்மத்தின் தலையில் 'இது வேண்டாத கருத்து' என சம்மட்டி அடி வைத்தார்.

கணவன் இறந்துவிட்டானா? இனி மனைவிக்கு என்ன வாழ்க்கை இருக்கிறது? ஆகவே அவளையும் உயிரோடு கணவனின் உடம்போடு சேர்த்து எரித்து விடலாம் என்று பரிந்துரை செய்கிற 'சிதா வாரோஹணம் பிரம்மச்சர்யம்' என்கிற மனுவின் மனிதாபிமானமற்ற இரக்கமற்ற குரலைக் கண்டு... அதன் குரல்வளையை அழுத்திப் பிடிக்கிறார்.

இப்படியாக...

பகுத்தறிவாளர் பாசறையே பாராட்டுவிழா நடத்துகிற அளவிற்கு குறிப்பாகச் சொல்வதானால் திராவிடர் கழகத்தலைவர் மதிப்பிற்குரிய ஆசிரியர் கி.வீரமணி மற்றும் பெரியாரியத்தில் ஊறித்திளைக்கும் நமது அன்பிற்குரிய ஐயா சின்னக்குத்தூசியார் போன்றவர்களே உளமாரப் பாராட்டுகிற அளவிற்கு ஆன்மீகத்தின் மத்தியில் இருந்தபடியே பெரியாரியக் குரலை எதிரொலித்து விழிப்புணர்வைத் தந்தார் தாத்தாச்சாரியார். அவரிடம் கேட்

கக் கேட்க வேதஞானமும் வெளிச்ச சிந்தனைகளும் வெளிப்பட்டபடியே இருக்கிறது.

அவரே இப்போது இந்த 'சடங்குகளின் கதை' மூலம் நம் சமூகத்தில் கடைபிடிக்கப்பட்டு வரும் சடங்குக ளின் உள்ளார்ந்த காரணங்களை ஆராய்ந்து நமக்குத் தெளிவை ஏற்படுத்தும் திருப்பணியைச் செய்திருக்கி றார்.

முதுமையின் உச்சத்தில் பார்வைத் திறனும், கேட் கும் திறனும் குறைந்துபோன நிலையில் மெலிந்த குர லில் வலிமையான தகவல்களை தாத்தாச்சாரியார் தர... அதை அப்படியே உள்வாங்கி... பொருள் பிசகாமல் எளிமையாய் அழகாய்க் கட்டுரை வடிவில் நமக்குத் தந்திருக்கிறார் நக்கீரன் உதவியாசிரியர்களில் மிகவும் இளைய தம்பியான ஆரா.

தம்பி ஆரா துடிப்பானவர். அவரே ஒரு சிறந்த கவிஞராக இருப்பதால் தாத்தாச்சாரியாரின் தத்துவங்கள் இவரது நடையில் மிளிர்கிறது.

'இந்துமதம் எங்கே போகிறது' தொடரையும் தாத்தாச் சாரியார் சொல்லச் சொல்ல சுவை குன்றாமல் தந்தவர் இதே தம்பிதான். எனவே தாத்தாச்சாரியாரைப் பாராட் டுகிற இதே நேரத்தில் தம்பி ஆராவையும் நாம் பாராட் டியே ஆகவேண்டும்.

இந்த 'சடங்குகளின் கதை'களுக்கு அபூர்வமான ஓவி யங்களைத் தீட்டிய தூரிகை பிரம்மாக்கள் கரோ, ஸ்யாம், அரஸ் ஆகியோரையும் அவர்களது படைப்புச் சித்திரங் களையும் இந்த நேரத்தில் நெஞ்சாரப் பாராட்டுவோம்.

அதே போல் நக்கீரன் வேலை நெருக்கடிகளுக்கு மத் தியிலும்... இந்த நூலை நேர்த்தியாக அழகியல் உணர்

வோடு அன்புத்தம்பி குருசாமியின் வழிகாட்டலின்படி லே-அவுட் மூலம் கட்டமைப்பு செய்து தந்த கணினித் தம்பி கணேசன்... இந்நூலுக்கு அட்டை என்னும் அழகான சட்டை வடிவமைத்த தம்பி மதி ஆகியோர் நம்மால் கைகுலுக்கிப் பாராட்டப்பட வேண்டியவர்கள். இப்படி இந்த நூலுக்கு பல்வகையிலும் ஒத்துழைத்த அத்தனை பேரையும் பாராட்டி நன்றி தெரிவித்துக்கொள்ளும் இந்த வேளையில்...

தமிழ் வாசகப் பெருமக்களாகிய நீங்கள்... வழக்கம் போல் இந்த சடங்குகளின் கதைக்கும் மகத்தான வரவேற்பைத் தருவீர்கள் என்கிற என் நம்பிக்கையையும் தெரிவித்துக் கொள்கிறேன். மொத்தத்தில் இந்த நூல் ஒரு தத்துவப் புதையல். அறிவார்ந்த ஆராய்ச்சியின் அற்புதமான ஆலாபனை இன்னும் சொல்வதானால் புத்திக்கே புல்லரிப்பைத் தரும் பூபாளப் படைப்பு. ஆகவே இதனை வாசிக்கும் நீங்கள் உங்கள் எண்ணங்களை எங்களுக்கு எழுதலாம்.

-என்றும் அன்புடன்,
நக்கீரன்கோபால்

## சடங்குகளின் கதை!

எப்போதுமே ஒரு காரியத்தை ஆரம்பிக்கிறபோது மங்களகரமாகவும்... ஸ்திரமாகவும் ஆரம்பிக்க வேண்டும். அப்போதுதான் காரியசித்தி உண்டாகும் என்பது நம் நம்பிக்கையல்லவா?...

அதனால் மங்களகரமான கல்யாணத்தில் இருந்து ஆரம்பிக்கலாம்.

அம்மி மிதிப்பது!

கல்யாணத்தில் எவ்வளவோ சடங்குகள் இருக்கின்றன. ஏன் முதலில் இதை தேர்ந்தெடுத்தோம். ஸ்திரமாக ஆரம்பிக்க வேண்டும் அல்லவா?...

இன்றும் கூட நமது வீடு வாசல்களில்... "சொல்ல சொல்ல குத்துக் கல்லாட்டம் உக்காந்திருக்கறதப் பாரேன்...' என்று சொல்வதைக் கேட்டிருக்கிறோம். இது போல் குடும்பம் குத்துக்கல்லாக ஸ்திரப்பட்டு நிற்க வேண்டும் என்பதற்காகத்தான் இந்த சடங்கு.

அதாவது பெண்ணை நடை நடையாய் அழைத்து வந்து அம்மியொன்று மீது ஏறி நிற்க வைப்பார்கள். உடனே புரோகிதர்



"ஆதிஷ்ட இமம் ஆஸ்மானம்
அஸ்மே வத்வம் ஸ்திராபவா..."

நீ எப்போதும் உன் குடும்பத்தை இந்த கல்லைப் போல ஸ்திரமாக வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது சந்தேகப்பட்டு குடும்பம் என்ற கட்டமைப்பு உடைந்து போகாமல் இந்த கல்லைப் போல குடும்பத்தை கெட்டி யாக வைத்துக் கொள்ள வேண்டும் என்கிறார்.

இதன் பின்னணி மலைவாழ் பழங்குடியினரிடமிருந்து நமக்குக் கிடைக்கிறது.

அதாவது மலைப் பழங்குடியின மக்கள் ஒவ்வொரு செய்கையின் போதும் ஒரு கல்லின் மீது ஏறி நின்று "இந்த கல்லைப் போல உறுதியாக இக்காரியத்தில் இறங்குகிறேன்..." என சங்கல்பம் எடுத்துக் கொள்வார் கள்.

இதை கவனித்து பிராமணர்கள்... அந்தக் கல்லை தூக்கி கல்யாணத்தில் போட்டார்கள்.

மலை மக்களான (Tribals)-ன் வழக்கத்தை... கல்யா ணத்துக்கு கொண்டு வந்து விட்டாயிற்று. செங்கல்லை மிதித்தால்... வாழ்க்கையும் செங்கல் போலவே உடைய லாம்.

அதனால் கருங்கல் தேர்ந்தெடுக்கப்பட்டது. அதுவும் வீடுகளில் கருங்கல்லுக்கு எங்கேபோவது... அதனால் அம்மியை கொண்டுவரச் சொன்னார்கள்.

சட்னி அரைப்பது, குழம்புக்கு உண்டான மசாலா அரைப்பது இவற்றுக்காக பயன்பட்டு வந்த அம்மியைப் பயன்படுத்தி.. பிராமணர்கள் மக்கள் தலையில் மிளகாய் அரைத்தார்கள். அரைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

இதுதான் அம்மி மிதிப்பது என்ற சடங்கின் தோற்றம். அதாவது கல்லை மிதிப்பது தான் இச்சடங்கின் கருத் துரு.

ஆனால்... வீடுகளில் கிடைக்கும் கல் அம்மி என்பதால்... அம்மி மிதித்தல் ஒரு சடங்காகி விட்டது.

அடுத்து...

அம்மி மிதிக்கிறாள் மணப்பெண். ஏன் எதற்கு? என் றெல்லாம் பார்த்து விட்டோம்.

அம்மி மிதிக்கும்போது அவளது பாதாதி அரவிந்தங்க ளில் பணிந்து... பூக்காம்புகள் சற்றே பருத்ததைப்போல அமைந்த அவளது கால் விரல்களை தன் உள்ளங்கை யால் வருடியபடிவே பெருவிரலுக்கு பக்கத்து விரலில் மெட்டியை மாட்டுகிறான் மணமகன்.

அப்போது... கல்யாணம் நடத்திவைக்கும் வாத்யார்... மாப்பிள்ளையைப் பார்த்து, "நிமிர்ந்து மேல பாருங்கோ... அருந்ததி பாருங்கோ...' என மேல் நோக்கி கை காட்டுகி றார்.

பையனும் பேந்த பேந்த மேலே பார்க்கிறான்.

என்ன அருந்ததி நட்சத்திரம் தெரியுறதா?" என கேட்கி றார் வாத்யார்.

"ம்... தெரியுதே...' என்கிறான் பையன்.

அதாகப்பட்டது முகூர்த்தம் 5-5.30 ஆக இருக்கலாம். 6-6.30 ஆக இருக்கலாம். ஏன் 9-9.45 ஆக கூட இருக்க லாம். இப்பேர்ப்பட்ட சுபயோக சுப காலைவேளையில்... சாதாரண நட்சத்திரமே தெரியாது. பிறகு எப்படி அருந் ததி நட்சத்திரம் தெரியும்?

நான் கலந்துகொண்ட கல்யாணம் ஒன்றில் பையன் இதுபோலத்தான் 'அருந்ததி நட்சத்திரம் தெரிகிறது' என சொல்லிவிட்டான்.

நான்... கொஞ்ச நேரம் கழித்து 'ஏண்டாப் பயலே... உன் கல்யாண முகூர்த்தம் 7.30-8.15 விடிந்து 2 மணி நேரத் துக்கும் மேலே ஆகிவிட்டது. சூரியன் வானத்தில் சூப்ப ராய் ஜொலிக்கிறான்.

இப்பேர்ப்பட்ட நேரத்தில் உனக்கு அருந்ததி நட்சத்திரம் எங்கே தெரிந்தது? எனக்கும் கொஞ்சம் காட்டேன்'- எனக் கேட்டேன்.

அவன்... பதறிப்போய் வாத்யார் தெரியுதுனு சொல்லச் சொன்னார். சொன்னேன் என்றான்.

இவனைப்போல பல மாப்பிள்ளைகள் மந்திரம் ஓதும் புரோகிதர்களின் கைப்பிள்ளைகளாக இருக்கிறார்கள்.

சரி அருந்ததி யார்?

உங்களுக்குத் தெரியுமா?

சூரிய வம்சத்து மன்னர் பரம்பரை திலிபன், ரகு, அஜன், தசரதன், ராமன்... என புகழ்பெற்றது. பெரும்புகழ் படைத்த சூரியவம்ச மன்னர் குலத்தின் ராஜகுருவானவர் வசிஷ்டர்.

இவரது மனைவிதான் அருந்ததி. இரண்டு பேரும் கணவன்-மனைவி என்றால் எப்படி வாழவேண்டுமோ அப்படி வாழ்ந்தவர்களாம். கற்புக்கரசிக்கு தமிழர்களாகிய நாம் கண்ணகியை காட்டுவதைப் போல... வடக்கத்தியர்கள் காட்டுவதுதான் அருந்ததி. ஆனால்... நாமோ கல்யாணத்தன்று கண்ணகியை மறந்துவிட்டு அருந்ததியை பார்க்க ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறோம்.

அருந்ததி கற்புக்கரசி என்பதற்கான ஒரு கதையும் இருக்கிறது. பெண்களின் மனோபாவத்தைப் பற்றி அறிவதற்கு இந்திரன், சூர்யன், அக்னி மூவரும் அந்தணர் வேடம் பூண்டு அருந்ததியைப் பார்க்கச் சென்றனர்.

இவர்களைப் பார்த்த அருந்ததி... மூவரையும் உபசரித்து அவர்கள் கை, கால் தூய்மை செய்து கொள்வதற்கு தண்ணீர் எடுக்கச்சென்றாள்.



அப்போது... மூவரும், தேவி, நாங்களே இந்த பாத்தி ரத்தை தண்ணீரால் நிரப்பிக் காட்டுகிறோம். நீ போக வேண்டாம் - என தடுத்தனர்.

சரி... அப்படியானால் "எனது பாத்திரத்தை நீங்களே நீரால் நிரப்புங்கள்' என்கிறாள் அருந்ததி.

இந்திரன் வந்தான்... பிராமணர்களுக்கு பயப்படாமல்... தவம், யாகம் முதலியவற்றை ஒருவன் செவ்வனே செய்து என் இந்திர பதவியை இன்னொருத்தன் அடை வான் என்பது சத்தியம் எனில்...

இந்த கும்பத்தின் கால்பங்கு நீர் நிரம்பட்டும் - என்றான்.

உடனே கால்பகுதி கும்பம் நீரால் நிரம்பியது. அருந்ததி முகத்தில் புன்னகை அரும்பியது.

அடுத்து அக்னிதேவன் முன்னே வந்தான். யாகத்தை காட்டிலும் அதிதியை பூசித்து நன்மைளிப்பதில் நான் திருப்தியடைவது சத்தியமாயின் அடுத்த கால்பங்கு தண்ணீரால் நிரம்பட்டும் என்றான்.

சொன்னபடியே கும்பத்தின் அடுத்த கால்பங்கு நீரால் நிரம்பியது. அருந்ததி ஆச்சரியப்பட்டாள்.

அடுத்து... சூரியன் முன்வந்தான். தீயவர்களால் லோகத்தில் ஏற்படும் தீமைகளை வேதியர்கள் செய்யும் அர்க்ய சம்ஸ்காரங்கள் அகற்றுவது உண்மை என்றால்...

மேலும் ஒரு கால்பங்கு நீர் நிரம்பக்கடவது என்றான்.

இப்போது அருந்ததியின் கும்பத்தில் முக்கால்வாசி நீர் நிரம்பியது.

இன்னும் கால்பகுதி நிரம்பவேண்டும். அது அருந்ததியிடம் இருக்கிறது. அருந்ததியின் கற்பில் இருக்கிறது. நிரம்பியதா மிச்சம்?

அருந்ததியின் கும்பத்தில் முக்கால்வாசி நீரால் நிரம்பியதை பார்த்தோம். சூரியன், சந்திரன், அக்னி ஆகிய மூன்றுபேரும் அருந்ததியின் கும்பத்தின் முன் நின்று... அவரவர் தங்கள் வைராக்யங்களை வெளிப்படுத்த... ஆளுக்கு கால் பங்கு வீதம் முக்கால்வாசி நிரம்பியது.

கடைசியாக அருந்ததி வந்தாள். அந்த கும்பப்பாத்திரத்தின் முன் நின்றாள். இந்த லோகத்தில் உள்ள பெண்கள் தங்களது ரகசிய ஸ்தானத்தில் அதாவது பிறப்புறுப்பில்... வேறு ஆண்களின் தொடர்பு நிகழாமல் என்னைப் போல பார்த்துக் கொள்வார்கள் எனில்... அவர்கள் பதிவிரதை அதாவது கணவனை போற்றுபவர்கள் ஆவார்கள். அவர்களை ஜாக்கிரதையாக காக்க வேண்டும். என் கற்பைப் போல் அவர்கள் கற்பும் காக்கப்பட வேண்டும் என்றால் மீதி பாத்திரமும் நீரால் நிறையட்டும்"

என அருந்ததி தன் மெல்லிய வாயால் வல்லிய குரல் எழுப்ப... அந்த கும்பப் பாத்திரத்தின் பாக்கியும் நீரால் நிரம்பியது.

அதாவது அருந்ததி கற்பு நிரம்பியவள் என்பதற்காக இந் தக் கதை கட்டப்பட்டது.

இன்னொரு சுவாரஸ்யக் கதை, தெரியுமா?... இதுவும் அருந்ததியின் கற்பு பற்றி சிலாகிப்பதுதான்.

தட்ஷன் என்னும் மன்னனை ஞாபகம் இருக்கிறதா?... பார்வதி... தாட்சாயினியாக அவதரித்தபோது அவருக்கு அப்பனாக இருந்தவனாக்கும்.

இந்த தட்ஷன் பிரகதி என்னும் குமரியுடன் கூடிக் கொஞ்சி தழுவித்திளைத்து சந்தோஷித்ததன் விளை வாக வந்து குதித்தவள் சுவாஹாதேவி.



இவளது இளமையும் அழகும் எடுப்பும் நடையும் நளின மும் எம மகராஜனையே கொல்லத் துணிந்தன. பார்த் தான் எமதர்மன். இவளை விட்டால் தனது அழகு என் னும் அஸ்திரத்தால் என்னையே கொன்று விடுவாள் போல, என மயங்கினான். சுவாஹாதேவி மீது காதல் கொண்டான் எமன்.

அதற்காக திட்டம் போட்டான். சுவாஹாதேவியை தன் சக்தியால் எலுமிச்சை பழமாக்கினான். அந்த பழத்தை விழுங்கி தன் வயிற்றுக்குள்ளேயே வைத்துக்கொண் டான்.

தேவைப்படும்போது வெளியே எடுத்து அவளை அனுப விப்பான். பிறகு விழுங்கி விடுவான்.

இப்படித்தான் ஒருமுறை சுவாஹாதேவியை வெளியே எடுத்து நந்தவனத்தில் உலவவிட்டு கொஞ்சிக் குலவி னான் எமன். இருவரும் காமக் களியாட்டங்களில் கரை புரண்டனர். மோகப் போரின் முடிவில் எமனுக்கு பயங் கர களைப்பு. என்ன செய்தான் அப்படியே நந்தவனத்தி லேயே தூங்கிவிட்டான்.

சுவாஹாதேவியோ தன் செழித்த அழகோடு நந்தவனத் தில் தனித்து விடப்பட்டாள். அப்போது அந்த வழியே அக்னிதேவன் நடந்து வர அவனைப் பார்த்துவிட்டாள்.

"ஏய் அக்னி இங்கே வா... என்னிடம் சுகத்தைக் குடி. எனக்குள் எரியும் மோக நெருப்பை நீதான் தணிக்க முடியும்' என அழைத்து அவனை அணைத்து தழுவி தன் ஆவலை தீர்த்துக் கொண்டாள் சுவாஹாதேவி.

சுவாஹா -அக்னி- சுகானுபவம் நடந்து முடிந்ததும் அந்த எலுமிச்சை வித்தையை கையிலெடுத்தாள் சுவாஹா.

இந்த அக்னி நமக்கு பூரண சுகம் தருகிறான். நாம் இவனை எலுமிச்சைப் பழமாக்கி விழுங்கி விட்டால் வேண்டும்போது வெளியே எடுத்து தீண்டிக் கொள்ள லாம். ஆசைக் கோட்டை தாண்டிக் கொள்ளலாம்

-என திட்டம் போட்ட சுவாஹா அக்னியை ஒரு எலு மிச்சை பழமாக்கி விழுங்கி விட்டாள்.

இதெல்லாம் நடந்து முடிந்தபிறகு ஆசுவாசமாக விழித் தான் எமதர்மன். சுவாஹாதேவி எதுவுமே நடக்காதது போல தன் கச்சைகளை சரிசெய்து கொண்டு கச்சித மாக உட்கார்ந்திருந்தாள்.

டக்கென அவளை ஓர் எலுமிச்சை பழமாக்கி முழுங்கி னான் எமன்.

சரி இதில் அருந்ததி எங்கே வந்தாள் என கேட்கிறீர் களா?...

பொறுமை பொறுமை...

அருந்ததியைப் பற்றி சொல்ல வந்துவிட்டு சுவாஹா என் பவளைப் பற்றியே சொல்லிக் கொண்டிருக்கிறாரே?... என்னடா இவர் என நினைக்கிறீர்கள்தானே.

அப்படி அல்ல... அருந்ததியின் கற்புசக்தியை நிலை நாட்டத்தான் சுவாஹாதேவி கதையே சொல்லப்பட்டி ருக்கிறது.

என்ன பார்த்தோம்?...

எமன். சுவாஹாதேவியை அனுபவித்த களைப்போடு நந்தவனத்தில் தூங்கிப் போனான். அந்த நேரம் சுவா ஹாதேவி அக்னி தேவனை தரிசிக்க மோகித்தாள். அக் னியோடு போகித்தாள்.

எமன் விழிப்பதற்குள் அக்னியும் சுவாஹாதேவியும் ஆசையோடு ஆலிங்கணம் செய்து முத்தத்தால் பரஸ் பர அபிஷேகம் செய்து கொண்டு... அந்த நந்தவன மெத்தையிலே மன்மத நர்த்தனமாடினர். எமன் தூங் கும்போது இவர்களின் இளமை விழித்துக் கொண்டு விளையாடிக் களித்தது.

எமன் விழித்ததும்... ஒன்றுமறியாதது போல் சுவாஹா தேவி... அக்னியை ஒரு எலுமிச்சை பழமாக்கி தனக்குள் விழுங்கி விட்டது வரையில் பார்த்தோம்.

எமன் விழித்ததும் இளமை ததும்ப நின்ற சுவாஹாதே வியை வழக்கம் போல் எலுமிச்சை பழமாக்கி தனக்குள் விழுங்கிக் கொண்டான்.

சுவாஹாதேவியோ அக்னியை எலுமிச்சைப் பழமாக்கி ஏற்கனவே விழுங்கி விட்டாள். அப்படிப்பட்டவளை எமன் ஒரு பழமாக்கி விழுங்கி விட்டான்.

இதனால் என்ன ஆனது?... அக்னி தேவன் சுவாஹாதே விக்குள் சென்று விட்டதால் உலகில் அசாதாரண நிலை ஏற்பட்டது.

தாய்மார்கள் சமைக்க முடியவில்லை. ஏனென்றால் அடுப்புக்கு அக்னியில்லை. அடுப்புக்கு அக்னியில்லை என்றால் உலகம் எப்படி இயங்கும்.

விஷ்ணுவுக்கு விவரம் தெரிந்தது.

எமன் அசந்த வேளையில்... சுவாஹா அக்னியோடு ஆனந்தக் கூத்தாடியதையும்... பிறகு எலுமிச்சம் பழ மாக்கி தன் வயிற்றுக்குள் வைத்துக் கொண்டதையும் அறிந்துகொண்டார் விஷ்ணு. இப்போது சுவாஹாதேவி எலுமிச்சை பழமாக எமன் வயிற்றில் இருப்பதையும் அறிந்தார் விஷ்ணு.

எனவே எமனை அழைத்து... "உனக்குள் எலுமிச்சை பழம் போல இருக்கும் சுவாஹாதேவியை வெளியே விடு' என்றார்.

அப்படியே செய்தான்.

வெளியே வந்த சுவாஹாதேவியிடம்... "உன் வயிற்றுக் குள் இருக்கும் அக்னிதேவனை வெளியே விடு' என் றார் விஷ்ணு.



சுவாஹாதேவி ஆசைப்பட்டது போல்... அக்னி தேவனை அவனுக்கே மணமுடித்து வைத்தனர்.

ஆனால்... சுவாஹாதேவியை அவள் இளமையை ருசித்த அக்னிக்கு ஆசை இன்னும் அடங்கவில்லை.

அழகுப் பதுமையாய் சதைசிற்பமாய் சுவாஹாதேவி காத் திருக்க...அக்னியோ சப்தரிஷி மண்டலத்தில் எப்போதும் ஜொலித்துக் கொண்டிருக்கும் ரிஷிகளின் மனைவிக ளோடு குஷியாக இருக்க வேண்டும் என ஆசைப்பட் டான்.

இதை தனது மனைவியான சுவாஹா தேவியிடமே சொன்னான்.

'அடியேய்... உன்னை அனுபவித்து அனுபவித்து எனக்கு சலிப்பாகி விட்டது. சப்தரிஷி மண்டலத்தில் என்றும் இளமையாக இருக்கும் ரிஷிகளின் மனைவிகளோடு தேக ஆனந்தம் கொள்ள துடிக்கிறேன்' என்றான்.

நான் இருக்க ஏன்டா அவள்களுக்கெல்லாம் ஆசைப்ப டுகிறாய் என்றல்லவா சுவாஹா கேட்டிருக்க வேண்டும்.

கேட்டாளா?... இல்லை. பிறகு?... "அப்படியே ஆகட்டும்... ஆனால் ஒன்று அந்த ரிஷிகளின் மனைவிகள் போல நானே உருவம் எடுத்து வருகிறேன். நீ அனுபவித்துக் கொள்' என்று யோசனை சொன்னாள் சுவாஹா.

சப்த ரிஷிகள் என்றால் ஏழுபேர். இவர்களில் ஒவ் வொரு ரிஷியின் மனைவியரை போலவும் உருவெடுத்து சுவாஹாதேவி வர... அவர்களை கட்டிப்பிடித்து முத்தம் கொடுத்து உயிர் நடுங்க உவகையாய் புணர்ந்து பூரித் தான்

அக்னி. இன்னும் ஒருத்தி பாக்கியிருக்கிறாள். அவள் தான் வசிஷ்டரின் மனைவி அருந்ததி.

ஆறு ரிஷிகளின் மனைவிகளையும் அனுபவித்தவன், அடுத்து கடைசியாக அருந்தியை அனுபவிக்க தயாராக இருந்தான்.

சுவாஹாதேவி தனது சக்தியால் அருந்ததி போல உரு வம் எடுக்க முயற்சித்தாள். ம்ஹூம். முடியவில்லை. என் னென்னமோ செய்தாள். ஆனாலும் அருந்ததி போல் அவளால் உருவெடுக்க முடியவில்லை.

ஏனென்றால்... அருந்தி கற்புக்கு அரசி.

இதை உணர்ந்து கொண்ட சுவாஹாதேவி, அருந்த தியை பார்த்தபடி... "தேவி... நான் தவறு செய்து விட்டேன் என்னை மன்னிப்பாயாக இனி... அக்னி முன்னிலை யில் நிகழும் ஒவ்வொரு கல்யாணத்திலும்... உன்னைப் பார்த்து வணங்கினால் அந்த தம்பதிகள் சுகம், தனம், புத்திரர்களைப் பெற்று வாழ்வாங்கு வாழ்வார்கள்" என்று கூறினாளாம்.

அதன்படிதான்... இன்னும் கல்யாணத்தின் போது அருந் ததி நட்சத்திரம் பார்க்கிறார்கள்.

அது காலை மணி 9-9.45 சூரியதேவன் எரியும் நேரமாக இருக்கும் போதும் அருந்ததி நட்சத்திரம் பார்க்கிறீர்களே எப்படி?...

உங்கள் மனைவியை விட அருந்ததிக்கு கற்பு அதிகம் என நீங்கள் நம்புகிறீர்களா?...

அம்மி மிதித்தாயிற்று. "அருந்ததி' யாரென்று பார்த்தாயிற்று அடுத்து?...கல்யாணத்தில் அம்மி மிதித்து, அருந்ததி பார்த்துவிட்டோம்.

இப்போது மணமேடையில் நடக்கும் மந்த்ரச் சடங்குகளைப் பார்க்கலாமா?...

அதற்குமுன் ஒரு மிகப்பெரிய விஷயத்தைப் பார்த்துவிடுவோம். நக்கீரன் இதழில் 'இந்துமதம் எங்கே போகிறது?' தொடரிலே... விவாஹம் என்றால் தூக்கிக் கொண்டு ஓடுவது என்று அர்த்தம் என குறிப்பிட்டிருந்தேன்.

ஆனால் கல்யாணம் என்பதற்கு என்ன அர்த்தம் என நான் சொல்லவில்லை. இப்போது சொல்கிறேன்.

ஆணையும், பெண்களையும் வளர்த்து அவர்கள் கழுத்திலே பூ வளர்த்து எதிரிலே தீ வளர்த்து... சுற்றம் சொந்தங்களையெல்லாம் வளர்த்து தாலி கட்டும் நிகழ்ச்சி.

இது புனிதமான மங்களமான திவ்யமான சடங்கு. சமஸ்கிருதத்தில் புனிதமான மங்களமான நல்ல காரியத்துக்கு கல்யாணம் என்று பெயர்.

அப்படிப் பார்த்தால் நாம் நல்ல மனதோடு தூய அன்போடு அடுத்தவர்க்கு செய்கின்ற உதவிகள் செய்யலாம். அதற்குப் பெயரும் கல்யாணம் செய்வதுதான்.



இப்படிப் பார்த்தால் ஒரு மனுஷனோ, மனுஷியோ பிறந்ததிலிருந்து இறக்கும் வரை தினமும் கல்யாணம் செய்தபடியே இருக்க வேண்டும். அதாவது நல்லது செய்து கொண்டே இருக்க வேண்டும்.

அப்படியென்றால்... இப்போது நாம் குறிப்பிடும் கல்யாணத்துக்கு என்ன பெயர்?...

கன்யா வரணம். இதுதான் பெயர். அப்படியென்றால்... கன்னிகையைக் கோருவது. அதாவது முன்காலத்தில் பெண்ணோடு சேர்ந்து இல்லற வாழ்வு நடத்தவேண்டும் என விரும்புகிற ஒருவன் தன் குலம், ஒழுக்கம், வயது, குணம், செல்வம் இவைகளுக்கு ஏற்றபடி ஒரு கன்னிகையைத் தேடி அந்த கன்னிகைக்கு உரியவரான தந்தை அல்லது முக்கிய உறவினர்களிடம் செல்ல வேண்டும்.

"உங்களுடைய கன்னிகையை எனக்கு மணமுடித்துத் தாருங்கள்...' என வேண்டுகோள் வைக்க வேண்டும்.

இதற்குப் பெயர் தான் கன்யாவரணம். அதாவது பெண் கேட்பது. இந்த பெண் கேட்கும் சடங்கான கன்யாவரணம்தான் பிற்காலங்களில் மருவி மருவி 'கல்யாணம்'

என ஆகிவிட்டது என்றும் நாம் நம்ப வாய்ப்புகள் நிறைய இருக்கின்றன.

இப்போதெல்லாம்... பெண்ணை பெற்றவர் தான் அலைந்து திரிந்து மாப்பிள்ளை தேடிக் கொண்டிருக் கிறார். இப்படி மாப்பிள்ளையே தேடிப்பிடித்து மண முடித்தால் அதற்குப் பெயர் கன்யாவரணம் அல்ல. அது காளைவரணம். அதாவது காளையை தேடுவது. இப்போதும்... வைதீக முறையில் நடக்கும் "கன்யாவ ரண'ங்களை பார்த்தால் முதலில் பெண் தேடும் ஐதீகத் துடன் கூடிய மந்த்ரங்களைதான் தொடக்கமாக ஆரம் பிக்கிறார்கள்.

பெண் தேடி கண்டுபிடித்து மணமேடையில் உட்கார வைத்தாகிவிட்டது. இனிமேலும் "பெண் தேடவேண் டும். அதற்கு அலைய வேண்டும் என்று பொருள் படும் படியான மந்த்ரங்களை சொல்லிக்கொண்டிருக்கிறார் வாத்யார்.

சரி... இனி கல்யாண மந்த்ரச் சடங்குகளை பார்ப்போம்.

கல்யாணம் என்றாலே இப்போது நடக்கும் கல்யாணம் மட்டும் அல்ல! "நல்லது செய்தல்' என்ற பொதுவான குணத்துக்கு கல்யாணம் என்று பெயர்.

ஆனாலும் நமது பேச்சு வழக்கில், எழுத்து வழக்கில் கல்யாணம் என்ற பேரே குடித்தனம் நடத்தி வருகிறது. எனினும், இனி நாம் தமிழில் திருமணம் என்று குறிப்பிடு வோம்.

மணமேடையில் பெண் உட்கார்ந்திருக்கிறாள். அக்னி ஹோம குண்டத்தின் அருகே... உட்கார்ந்து கொண்டு திருமணத்தை நடத்தி வைக்கும் வாத்யார்... வியர்த்து

விறுவிறுத்து தன் வஸ்திரத்தால் உடலெங்கும் துடைத் தபடியே மந்த்ரம் ஓதிக் கொண்டிருக்கிறார்.

அதுவும் மணப்பெண்ணை குறிவைத்தபடியே மந்த்ரம் ஓதுகிறார்...

இங்கே உங்களுக்கு ஒரு கேள்வி வரும் 'அக்னி எதற்கு...? அதனால் புகை தானே வருகிறது?...' என்று.

ஆனால்... மனிதன் தன் பாவங்களை தீர்த்துக் கொள்ள அக்னி தேவனை வழிபட, பாவங்கள் அக்னியிடம் போகும். அப்பாவம்... அங்கிருந்து பிராமணனிடத்தில் வரும். பிராமணன் வேதச் சொற்களை வெளியிடுவ தால் அந்த வேதச் சொற்கள் அவனது பாவத்தை தீர்க் கும்.

இதற்காகத்தான் அக்னியாம்.

சரி... மணமேடையில் பெண்ணை உட்கார்த்தி வைத்து...

'ஜாதகர்மா' என சத்தம் போடுகிறார் வாத்யார். உடனே ஜாதகர்மாவுக்கான ஒரு மந்த்ரத்தை சொல்கிறார்.

இங்கே நமக்கு மந்த்ரம் தேவையில்லை. என்னத்துக் காக இது என்றால் பெண் பிறந்தபோது ஜாதகம் கணிப் பதற்காக உருவாக்கப்பட்ட ஒரு சடங்கு.

இதை அப்பெண் பிறந்தபோதே செய்திருக்க வேண் டும். வாத்யாரின் பணத்தேவைக்காக... மணமேடையில் செய்யப்படுகிறது.

அடுத்தது நாமகரணம். இது உங்களுக்கே தெரியும். அதாவது பெயர் சூட்ட வேண்டிய சடங்கு. பெண்ணுக்கு பெயர் சூட்டி இருபது வருடங்கள் அவளை அப்பா-அம்மா, வாய் நிறைய அழைத்திருப்பார்கள். பள்ளிக்கூ

டத்தில் சேர்த்திருப்பார்கள். அவளும் எவ்வளோ சாத னைகள் செய்து... திருமணப் பத்திரிகையிலும் அவள் பெயர் அச்சடிக்கப்பட்டிருக்கும்.

இதெல்லாம் தெரிந்தும்... "நாமகரணம்' என்னும் ஒரு சடங்கை முட்டாள்தனமாக வாத்யார் நடத்துவார் சில மந்த்ரத்தை ஓதி.

அடுத்தது அன்னப்ராசனம். கேட்டால் உங்களுக்கு சிரிப்பு வரும்.

மணமேடையில் வளர்ந்து செழித்து கொழித்து பருவம் எய்தி அமர்ந்திருக்கிற அந்த பெண்ணை சின்னக் குழந் தையாக இருப்பது போல் நினைத்துக் கொள்ளுங்கள். தாய்ப்பால் குடிக்கும் வயது முடிந்த உடன்...

கொஞ்சம் சாதத்தை எடுத்து அதில் நெய் போட்டு... அந் தக் குழந்தைக்கு முதன்முதலாக ஊட்டுவார்கள்.

'இனிமேல்... உனக்கு இதுதான் உணவு, வாழ்க்கை முழுதும் இனிமேல் நீ தாய்ப்பால் சாப்பிட முடியாது. உன் முதல் உணவை மெல்ல சாப்பிடு... பலம் பெறு...' என பக வானை பிரார்த்தித்துக் கொண்டு அந்த சின்னக் குழந் தையின் அழகிய வாயில் கொஞ்சமாய் குழ குழவென வடித்த சாதத்தை ஊட்டுவார்கள்.

இந்த நிகழ்ச்சியைத் தான் அன்னப்ராசனம் என்று சடங் காக்கினார்கள். சரி. இது குழந்தைக்கு பொருந்தும்.

சாப்பிட்டு தளதளவென வளர்ந்து மணவறையில் உட் கார்ந்திருக்கிறாளே இளம்பெண். நேற்று இரவு வரை திருமண டிபனை மூக்குப்பிடிக்க சாப்பிட்டவள். அவ ளுக்கு... முதல் உணவை ஊட்டும் சடங்குதான் இந்த அன்னப்ராசனம்.

இதுவும் வாத்யாரின் வயிறு வளர்க்கவே அன்றி வேறு என்னத்துக்கு?...

அடுத்தது ரொம்ப முக்யமான சடங்கு. பெயர் சூடாகர்மா.

மணப்பெண் ஸ்பெஷல் சிகையலங்காரம் பண்ணிக் கொண்டு... ஓய்யாரமாக உட்கார்ந்திருக்கிறாள்.



அவளைப் பார்த்து மணப்பந்தலுக்கு அருகே இருக்கும் பெண்கள் பேசிக் கொள்கிறார்கள்.

"அதோ பாருடி... பொண்ணுக்கு தலைமுடி எவ்வளவு நீளம்?... பாரு... என்ன அழகா அவ இடுப்புக் கீழ தொடையை தட்டி விளையாடுறது பாரு அவ கூந்தல்..." என ஆச்சரியம் கொட்டினார்கள்.

அதில் ஒரு சந்தேக சிகாமணி சொன்னாள். "சவுரி முடியா இருக்கும்டீ...". அதற்கு பதில் கொடுத்தாள். இன் னொரு நிரூபண நங்கை. "இல்லடீ... அவ காலையில் குளிச்சுட்டு வரும்போதே பாத்தேன்... இவ்வளவு நீள கூந்தலை துவட்டறதுக்கு ரொம்ப கஷ்டப்பட்டதை...' என்றாள்.

சரி... மணப்பெண்ணுக்கு தொடை தட்டி விளையாடும் கூந்தல் இருக்கட்டும் நல்லதுதான்.

ஆனால்... இப்போது வாத்யார் சொல்கிறார் "சூடாகர்மா' பண்ணணும்.

சூடா கர்மா என்றால்?...

சூடாகர்மா என்றால், பெண்ணுக்கு மொட்டை யடிக்கும் சடங்கு. அடப்பாவிகளா... இப்பேற்பட்ட "தொடை தட்டும் கூந்தல்காரி'க்கா மொட்டையடிக்க வேண்டும்?...

வாத்யார் அப்படித்தான் மந்திரம் மட்டும் சொல்கிறார்.

சின்ன வயதில் குழந்தைக்கு முதன்முதலாய் முடியிறக்குவது விசேஷமானது. ஒரு வயது ஆன தருவாயில் முதன்முதலாக குழந்தையை தாய்மாமன் மடியில் உட்கார வைத்து மொட்டையடிப்பார்கள், காது குத்துவார்கள். அந்த சடங்கை தான் மறுபடியும் திருமணத்திலும் செய்வது போன்று பாவ்லா செய்கிறார் வாத்யார். உண்மையில் இச்சடங்கை செய்தால் மணப்பெண் மொட்டையோடு பந்தலுக்கு வரவேண்டும். எப்படியிருக்கும் என்று யோசித்துப் பாருங்கள்.

இதிலிருந்து என்ன தெரிகிறது வாத்யார் நமக்கெல்லாம் மொட்டையடித்து "காது' குத்துகிறார் என்று புரிந்து கொண்டீர்களா?...

இது மட்டுமல்ல...

ஒரு பெண்ணுக்கும் அவள் அப்பாவுக்குமான பாசத்தைக்கூட நமது மதம் சடங்காக்கி வைத்திருக்கிறது.

திருமணச் சந்தடியில்... சுற்றிலும் வாழ்த்தொலிகள்... சாப்பாட்டுப் பந்தி வாசனைகள்... இவற்றிற்கிடையே

மணப்பந்தலில்... பெண்ணின் அப்பாவையும் அம்மா வையும்...

இத்தனை காலமாய் தங்கள் கண்ணின் எல்லையில் பார்த்துப் பார்த்து வளர்த்த தங்கள் பெண்ணை பிரியப் போகிறோமே என்று உணர்வு வாட்டுகிறது.

"முன்பின் தெரியாத ஒரு பிள்ளையிடம் நம் செல்லத்தை ஒப்படைக்கிறோமே... இந்தக் குழந்தை அந்தப் பிள் ளையுடன் நன்றாக வாழ்க்கை நடத்த வேண்டுமே...' என்ற வேதனை பெண்ணைப் பெற்ற அம்மாவையும் அப்பாவையும் வாட்டுகிறது.

எவ்வளவு தைரியப்படுத்திக் கொண்டாலும்... அவர்க ளையும் தாங்காமல் துக்கம் பீறிட்டு... கண்ணிலிருந்து கண்ணீர் முட்டிக் கொண்டு வருகிறது.



அவர்களே அப்படியென்றால்...

இதுவரை அறிமுகமே இல்லாத உலகத்தில் வாக்கப்ப டப்போகும் அந்த பருவக் குழந்தைக்கு எப்படியிருக்கும்.

'இத்தனை நாள் என்னை பூ போல வளர்த்த அப்பா வையும், அம்மாவையும், உடன்பிறந்தவர்களையும் நான்

பிரிய நேரிடுகிறதே...' என அந்த மணக்குழந்தை முகத்திலும் கலக்கம். மெல்ல, அவளது மையிடப்பட்ட விழிகளில் இருந்து கருமையைக் கரைத்துக் கொண்டு கண்ணீர் ஓடி வருகிறது.

இது சுத்தமான பாசம். பெற்றோரும், மகளும் ஒருத்தருக்கொருத்தர் பிரியும் நேரத்தில் கண்ணீர் சொரியும் அது உன்னதமான தருணம். மீண்டும் பார்த்துக்கொள்ளத்தான் போகிறார்கள் என்றாலும்...

இதுவரை இருந்த மகள் வேறு, இனிமேல் இருக்கப் போகிற மகள் வேறு.

அந்த தாமரையை தாரைவார்த்துக் கொடுக்கிற போது அம்மா, அப்பா, மகள் என ஆறு கண்களிலிருந்தும் ஆறாய் கண்ணீர்.

இது பாசச் சுரப்பு.

ஆனால் மந்த்ர சம்ப்ரதாயம் சொல்கிறது. இது அபசகுணமாம். அதாவது பெற்றோரும், பிள்ளையும் தங்களது பாசத்தை வெளிக் கொட்டும் அந்த கண்ணீர் அற்புதமான கவிதை.

இதை அபசகுணம் என்று சொல்லியதோடு நிற்காமல் இந்த அபசகுணம் நீங்க வேண்டுமென்றால்...

என்ன பார்த்தோம்?... திருமணத்தருணத்தில் அப்பாவை பார்த்து மகள் உகுக்கும் பிரிவுக் கண்ணீரைக் கூட மதம் சடங்காக்கி மந்த்ரமாக்கி வாத்யார் உய்ய உதவுகிறது.

இத்தனை நாள் நெஞ்சுக்குள் பொத்தி வைத்த பிஞ்சுத் தென்றல்... இனிமேல் இன்னொருத்தர் வீட்டில் வீசப் போகிறதே... மணம் பரப்ப வேண்டும். அது சுகந்

தம் சுமக்கவேண்டும் என ஏங்கும் அப்பாவின் கண்கள் கலங்குகிறது. அவளும் அழுகிறாள்.

இங்கே தான் நம் சம்பிரதாயம் சிரிக்கிறது. 'சுபமான இந்த காலகட்டத்தில எல்லாரும் கண்களை துடைத்துக்கொண்டு அழுவது கூடாது... இது அபசகுணம் ஆகி விடும்.

இந்த அபசகுணம் நீங்க வேண்டுமென்றால்... இந்தா இந்த மந்த்ரத்தை நான் சொல்லச் சொல்ல உச்சரி. நான் ப்ரோக்ஷணம் செய்கிறேன்.

(ப்ரோக்ஷணம் என்றால் மந்த்ரத்தை உச்சரித்த படியே தூய்மையான தண்ணீரை தலையில் தெளிப்பதுதான்)

என்ன மந்த்ரம்?...

"ஜீவாகும் ருதந்தி விமயந்தே அத்வரே தீர்க்காம்
அநுப்ரஸிதிம தீதியு நர வாமம் பித்ருப்யய
இதம் ஸமேநிரே மய பதிப்ய ஜநய பரிஷ்வஜே..."

இந்த சடங்கு கண்ணீரால் ஆனது. பாசத்தின் பெருக்கால் அப்பாவும், அம்மாவும், மகளும் கண்ணீர்த்துளிகள் வடிக்க... அது தீதென்று மந்த்ரம் புரோக்ஷக்கப்பட்ட வெறுந்தண்ணீரை தலையில் தெளிக்கிறார்கள். பாசக் கண்ணீர்த் துளிகளை விட... நமது மதம் அந்த வெறும் தண்ணீர்த் துளிகளுக்கு தான் முக்யத்துவம் கொடுக்கிறது.

சரி அந்த மந்த்ரம் என்ன சொல்கிறது? என்று பார்ப்போம்!

"திருமணம் என்றால் என்ன... நம் வீட்டில் ஒரு சுபகாரியம் நடந்தால்... நமக்கு முன் வாழ்ந்து விட்டுப் போன நம்

முடைய முன்னோர்கள், பித்ருக்கள் அகமகிழ்ந்து ஆசீர் வதிக்கும் நாள்.

திருமணம் எதற்காக?... அவளை கைப்பிடிக்கின்றானே மாப்பிள்ளை. அன்று முதல் அவன்தான் அவளுக்கு கணவன். தன்னை கரம் பற்றிய கணவனுக்கு உடலா லும், உள்ளத்தாலும், செய்கைகளாலும் சுகமளிப்பதே அவள் பணி.

அவளை கட்டிப்பிடித்து ஆலிங்கணம் செய்து... வள்ளு வன் சொன்னது போல்... உனக்கும் எனக்கும் இடையே காற்று செல்லக்கூடாத இடம் இருக்கக்கூடாது. அந்த அளவுக்கு நாம் கட்டிப்பிடித்து... நம் மூச்சுக்காற்றை சூடாக்க வேண்டும்.

இந்த வதூவரர்களின் (மணமக்களின்) சேர்க்கையை கன்னிகையின் பெற்றோர் நன்றாக நினைத்துப் பார்க் கட்டும்.

அழக்கூடாது. உங்கள் கண்ணீர்த்துளியின் பீடையை போக்கத்தான் மந்திரம் கலந்த இந்த தண்ணீர்த்துளி...

அடுத்த சடங்கு?...



திருமணம் முடிந்து வழியனுப்பும் போது வழியும் பாசக் கண்ணீரை தீட்டாகப் பார்க்கிறது நமது மத சம்ப்ரதாயம்... என்பதை இதுகாறும் பார்த்தோம்.

திருமணம் என்றாலே நம் எல்லோரின் நினைவிற்கு வருவது?... அல்ல... அல்ல... வரவைக்கப்பட்டிருப்பது.

மாங்கல்யம் தந்துநாநேந மமஜீவந ஹேதுநா
கண்ட்டே பத்நாமி ஸுபகே ஸஞ்ஜீவ ஸநத... ஸதம்...

டி.வி., சினிமா, ரேடியோ, கீடியோ என எல்லாவற்றிலும் கல்யாணம் என்றாலே... இந்த சுலோகம்தான் ஒலிக்கிறது. இதை வைத்து தாலி கட்றான் என அடையாளப் படுத்துகிறார்கள்.

இந்த சுலோகத்துக்கு வயது என்ன?... என்ன என்று பார்த்தால்... வேத காலத்திலோ... வேத மந்த்ரத்திலோ இந்த தாலி என்ற சடங்கே இல்லை.

மாங்கல்ய தாரணம் அதாவது தாலி கட்டுவதற்கென்று வேதத்தில் மந்த்ரமே இல்லை. அது குறிப்பிடப்படவே இல்லை.

அதனால் இந்த சுலோகம் நுழைக்கப்பட்டது. கட்டப்பட்டது. சரி இதற்கு என்ன அர்த்தம்?...

"இது மங்கள சூத்ரம். நான் ஜீவித்திருப்பதற்கு ஏதுவானது. இதை உன் கழுத்தில் கட்டுகிறேன். ஸௌபாக்யவதியே... நீ நூறு வருடங்கள் சுகமாய் வாழ்ந்திருப்பாயாக..." என்பது தான் இதன் அர்த்தம்.

இதன் பிறகு நடப்பது தான் பாணிக்ரஹணம்: அதாவது "கைத்தலம் பற்ற கனா கண்டேன் தோழீ...' -என ஆண்டாள் சொன்னாரே... அந்த கைத்தலம்தான் பாணிக்ரஹணம்.

அதாவது மணமகன் இருக்கிறானே... அவன் தனது வலது கையை தாழ்த்தி மேலே குவிந்துள்ள மணப் பெண்ணின் வலது கையை அப்படியே கொத்தாகக்கவ் விப் பிடிக்க வேண்டும். அதாவது எல்லா விரல்களையும் சேர்த்து ஸ்பரிசம் பண்ண வேண்டும்.

இப்படி கையைப் பிடிக்கும் போது வாத்யார் கடகட வென 4 மந்த்ரங்களை நாக்கை சுழட்டி சுழட்டி சொல்லி முடித்து விடுவார். இதுவும் ஒரு சடங்காம்.

அந்த சடங்கின் 4 மந்த்ரங்கள் என்ன?... பார்த்து விடு வோம்.

முதல் மந்த்ரம்...

க்ருப்ணாமிதே ஸுப்ரஜாஸ்த்வாய ஹஸ்தம்
மயாபத்யா ஜரதஷ்ஷர் யதாஸ பகோ அர்யமா
ஸமிதா புரந்திர் மஹ்யம் த்வாதுர்
கார்ஹபத்யாய தேவா.

அடியே... உன்னை என் வீட்டின் தலைவியாக இருக் கும் பொருட்டு பகன், அர்யமா, ஸமிதா, இந்திரன் ஆகிய தேவர்கள் உன்னை எனக்கு கொடுத்திருக்கிறார்கள். நீ என்னோடு இணைந்து நல்ல பிள்ளைகளைப் பெற்றுக் கொடு.

கிழத்தனம் அடையும் வரை என்னுடன் இருந்து என்னை ஆதரி... காதலி ... அதனால்தான் நான் உன்னை கைப்பிடிக்கிறேன். விரல் சேர்க்கிறேன்.

இரண்டாவது மந்த்ரம்?...

தேஹ பூர்வே ஜநாஸோ யத்ர பூர்வவஹோ
ஹிதா: மூர்த்தந்வாத் யத்ர ஸௌப்ரவ பூர்வோ
தேவப்ய ஆதபத்

முன்சொன்ன மந்த்ரத்தில் சொன்னேன் இல்லையா நான்கு தேவ புருஷர்கள் அவர்களுக்கு அக்னி அல்லது சூரியன் இவ்விருவரில் யார் தலைவனாக விளங்கினாரோ அவர்தான் உன்னை எனக்கு கொடுத்தார்.

ஆக முதல் மந்த்ரத்துக்கும் இரண்டாவது மந்த்ரத்துக்கும் சிறு முரண்பாடு மூள்கிறது.

உன்னை எனக்கு யார் கொடுத்தார் என்றால் அந்த தேவர் கொடுத்தார், இந்த தேவர் கொடுத்தார் என மணமகன் சொல்வதாக வாத்யார் மந்த்ரம் முடைகிறார்.

பக்கத்தில் தான் மணப்பெண்ணின் அப்பா இருக்கிறார். "அடப்பாவி மாப்பிள்ளையே... இந்த புஷ்பகுமாரியை... லட்டு பெண்ணை, அழகிய மணப்பெண்ணை நான்தானடா உனக்கு கொடுத்தேன்...' என அவர் சொல்ல மாட்டார். ஏனென்றால் அவருக்கு இந்த மந்த்ரத்தின் அர்த்தம் தெரியப்போவதில்லையே...

சரி அடுத்த இரண்டு மந்த்ரங்கள் என்ன?... கல்யாணப் பந்தலிலே காத்திருங்கள்...

பாணிக்ரஹன மந்த்ரங்களை பார்த்து வருகிறோம். இதுவரை இரண்டு மந்த்ரங்கள் பார்த்தோமா?...

அதாவது மாப்பிள்ளை தனது வலது கையால்... பெண்ணின் வலது கை ரேகைகளை ஊடுருவி விரல்களை வளைத்து... ஒரு கையளவு ஆலிங்கனம் செய்வதுதான் பாணிக்ரஹணம்.



முதல் இரு மந்த்ரங்களில்... தனது மாமனார் தனக்கு கொடுத்த அப்பெண்ணை... வேறு யாரோ கொடுத்தது போல காட்டிக் கொள்கிறது சம்ப்ரதாயம்.

சரி அடுத்த மந்த்ரங்களை பார்க்கலாமா?...

ஸரஸ்வதி ப்ரேதமவ ஸுபகே வாஜிநீவதி
தாம் த்வா விஸ்வஸ்ய பூதஸ்ய ப்ரகாயாமஸ்யக்நத:

ஸரஸ்வதி தேவியே... நீ எப்படிப்பட்ட சரஸ்வதி தேவி யென்றால்... நல்ல பாக்யம் உள்ளவரும் அன்னம் மற்றும் ஸ்தோத்ரங்களால் நிரம்பியவருமான சரஸ்வதிதேவியே... எங்களை நன்றாக ரக்ஷிக்க வேண்டும். இவனை இப்பெண்ணை நீ நன்றாக பாதுகாக்க வேண்டும்.

இந்த உலகப் பிராணிகளுக்கு பொதுவாக சொல்கிறோம்... நீ எங்களை நல்லபடியாக காப்பாற்றுவதற்காக உன்னை ஸ்தோத்ரம் செய்தபடியே இருப்போம்...

அடுத்தது...?

ய ஏதி ப்ரதிசஸ் ஸர்வா தசாசநு பவமாந

ஹிரண்ய ஹஸ்த ஐரம்மஸ் ஸத்வா மந்மநஸம் க்ருணேத...

காற்றானது உலகத்தின் மூலை முடுக்குகளில் எல் லாம் பரவிக் கிடக்கிறது. நீ இதுவரை இருந்த இடத்தையும், நான் இதுவரை இருந்த இடத்தையும் காற்று தேவன்தான் நிரப்பியிருந்தான். அதாவது எங்கோ மூலை முடுக்குகளில் இருந்த நம்மை இணைத்தவன் காற்று தேவன். அந்த வாயுதேவன் தான் உன்னையும் என்னையும் உன் மூச்சையும் என் மூச்சையும் இணைத் துள்ளான் என காற்றை போற்றுகிறது.

கைத்தலம் பற்றும்போது இந்த மந்த்ரங்கள் வாத்யார்க ளால் ஜெட் வேகத்தில் உச்சரிக்கப்படும். இதன் அர்த் தத்தை புரிந்து கொண்டீர்களா?...

அடுத்தது?...

பாணிக்ரஹணம் அதாவது கைப்பிடித்தல் நடந்தவுடன்... அப்படியே மணப்பெண்ணின் வலது கையை தன் வலது கையால் அனைத்து விரல்களையும் அணைத்துப் பிடித் தபடி பையன் எழுந்திருக்க வேண்டும்.

பிறகு அக்னிக்கு வலதுபுறமாக... பெண்ணின் வலது காலை ஒவ்வொரு அடியாக மணப்பையனே எடுத்து வைக்கவேண்டும். இவ்வாறு 7 அடிகள் எடுத்து வைப்ப தற்கு பெயர்தான் சப்தபதி.

என்னென்ன...

ஏ... பெண்ணே உன் வாழ்க்கையில் அன்னம் குறையா மல் எப்போதும் சோறுடைத்து வாழ்வதற்காக நீ முதல் அடி வைக்கிறாய். அந்த அடியில் விஷ்ணு உன்னை பின் தொடர்வார்.

இரண்டாவது அடி எடுத்து வைக்கிறாய். எதற்காக? அதே விஷ்ணு உன் தேகத்தில் புஷ்டி ஏற்படுவதற்காக

உன்னை பின் தொடர்கிறார் அந்த அன்னம் செரிப்பதற்காக..

நீ சகலவிதமான வ்ரதங்களையும் அனுஷ்டிக்க வேண்டுமல்லவா. அதற்காக மூன்றாவது அடி?

உனக்கு நல்ல சுகத்தை கொடுப்பதற்காக விஷ்ணு உன்னை ஃபாலோ பண்ண வேண்டுமே... குடும்பம் சந்தோஷமாக இருக்க... அதற்காக இந்த அடி.

உனக்கு மனிதர்கள் மட்டுமல்ல... விலங்குகளாலும் நன்மைகள் கிடைக்க வேண்டும். உன்னிடம் பசுக்கள் முதலான ஜீவன்கள் விருத்தியடைய வேண்டும் என்பதற்காக இந்த 5-ம் அடி.

நீ ஆறாவது அடியை எடுத்து வைக்கும்போது எல்லாவிதமான ருதுக்களும் உனக்கு அனுகூலமாகும்படி அமையும்.

நீ வைக்கின்ற இறுதி அடி. இவை அனைத்தையும் சேர்ந்து பெற! உன் வாழ்க்கையில் நீ நிறைவேற்ற வேண்டிய ஹோமங்களை எந்த குறையும் இன்றி நிறைவேற்றுவதற்காக விஷ்ணு உன்னை பின் தொடர்கிறார்.

ஏழு அடிகளைத் தாண்டி முடித்து விட்டாள் மணப்பெண்.

அடியே... நீ அடியடியாய் எடுத்து வைத்தாயே. எதற்கென்று தெரியுமா என கேட்டால்... வாத்யார் சொன்னார். நான் அடியெடுத்து வைத்தேன் என்கிறாள். வாத்யார்கள் இதுபோல் அர்த்தங்களை விளக்குவதில்லை.

ஏழு அடிகள் தாண்டி முடித்தவுடன் " "ஸகா ஸப்தபதா பவ... ஏஹி ஸீத்ருதே..." என்ற நீண்ட மந்த்ரத்தை மணப்பையன் சொல்கிறான்.

இதற்கென்ன அர்த்தம்?...

"ஏழு அடிகளை தாண்டிய நீ எனக்கு தோழியாக வேண் டும். நாம் இனி நண்பர்கள். உன்னுடன் நான் நட்பு கொள்கிறேன்.

நம் விருப்பங்கள் இனி ஒன்றாக இருக்கட்டும். நல்ல அன்புள்ளவர்களாயும், ஒருவருக்கொருவர் பிடித்த முள்ளவர்களாகவும் இருப்போம்.."

என்பதே.



"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை

பண்பும் பயனும் அது...!' -இந்தக் குறள் கூறும் பொரு ளுக்கும் அதற்கும் தொடர்பு உண்டோ...

சிந்தித்துக் கொண்டிருங்கள்.

அன்பு என்னும் பண்பாட்டின் அடிப்படையில் மனிதகுல வரலாற்றில் முக்யத்துவம் பெற்ற திருமணத்தைப்பற்றி வேதம் விஸ்தாரமாகப் பேசுகிறது.

வேதக் கருத்துகள் வளரும் காலத்தில் ஒரு ஆணையும், ஒரு பெண்ணையும் சேர்த்து ஒரு சமுதாயத்தை உண்டு

பண்ணும் பழக்கம் இருந்து வந்திருக்கிறது. இது சம்பந்தமான கருத்துக்கள் ஆங்காங்கே வேதத்தில் வெளிச்சப்படுகின்றன.

ஒரு பெண் ஓரிடத்தில் பிறக்கிறாள். ஒரு ஆண் வேறிடத்தில் பிறக்கிறான். இவர்கள் இருவரையும் இயற்கை ஒன்றாகச் சேர்த்து வைக்கிற நிகழ்வுதான் திருமணம், கல்யாணம்.

ஜன ஒற்றுமைக்காகத் தான் கல்யாணம் என்ற பந்தக் கயிறு கட்டப்பட்டது என்பதை வேதங்கள் கதை சொல்லிக் காட்டுகின்றன.

வேதம் சொல்கிறது "டேய்... நீ இந்தப் பெண்ணை உனது அந்தரங்க தோழியாக நினைத்து மனம் விட்டுப் பேச வேண்டும்".

"ஸ்நேகிதனே... ஸ்நேகிதனே ரகசிய ஸ்நேகிதனே...' - என இப்போது திரைப்படப் பாடல்களை என் பேரன், பேத்திகள் முணுமுணுக்கிறார்கள்.

ஆனால் வேதமோ பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே...

"ஸ்த்ரீனானந்த ரகஸ்ய ஸ்னேகஸ்ய...' என்கிறது.

எப்படி?... உங்கள் இருவருக்கும் இன்று முதல் சமுதாயத்தில் ஒரு அந்தஸ்தை கொடுக்கிறோமே... குடும்பத்தில் இனி இருவருடைய செயல்களும், எண்ணங்களும் அன்பின் அடிப்படையில் இணைந்திருக்க வேண்டும்.

நீ அவளை அந்தரங்கத் தோழியாக பாவிக்க வேண்டும். அவள் உன்னை அந்தரங்க நண்பனாக பாவிக்க வேண்டும்.

இதுபற்றி வேதத்தில் நூற்றுக்கணக்கான மந்த்ரங்கள் காணப்படுகின்றன.

இப்படி கல்யாணத்தைப் பற்றி நான் எழுதிவரும் வேளையில் அடியேன் க்ருஹத்திற்கு ஒரு சந்தேகஸ்தர் வந்தார்.

"வேறெதற்கு, சந்தேகம் கேட்கத்தான். நான் ஒரு கல் யாணத்துக்குப் போயிருந்தேன். மணமேடையில் குமா ரனும், குமாரியும் அமர்ந்திருக்க எதிரில் புகை கக்கிக் கொண்டிருந்தது ஹோமகுண்டம்.

இன்று முதல் வாழ்க்கையில் புதுவசந்தம் வீசப்போகி றது என நினைத்து முறுவலோடுதான் மேடைக்கு வந்த னர் இருவரும். ஆனால்... மாப்ளை கண்ணும் கலங்க... பெண் கண்ணும் கலங்க... நடத்தி வைக்கும் வாத்யார் கண்ணும் கலங்க... மண்டபமெல்லாம் கண்ணீர்தான். சின்னப் பிள்ளைகள் பாவம் ஓ. . .வென அழ ஆரம்பித்து விட்டன. எனக்குத் தெரியவில்லை. ஏன் இந்த அக்னி?... கல்யாணத்தில் ஏன் கண்ணில் புகையள்ளிக் கொட்டு கிறார்கள். வாழ்க்கை என்னும் ரயில் வண்டி புறப்படும் போதே இவ்வளவு புகையா?... தண்டவாளமே காணா மல் போகும் அளவுக்கு கண்ணை மறைக்கும் புகையை கிளப்பும் இந்த அக்னி ஏன்?...

-வந்த சந்தேகஸ்தர் வர்ணனைகளாகவே கேள்வி கேட் டார்.

அப்படி வளரும் அக்னியின் முன்பு இப்போது பதில் சொல்கிறேன் நீங்களும் கேட்டுக் கொள்ளுங்கள்.

ஆதிகாலத்தில் திருமணத்தில் நெருப்பில்லை. வேத காலத்தில் விவாஹம் என்பது தூக்கிக் கொண்டு ஓடும் நிகழ்வாக இருந்தபோதும்... "அக்னியன்றி, புகையின்றி

கல்யாணம் ஒன்று செய்குவோம்' என்பதுதான் வேதக் கல்யாணம்.

மந்த்ரங்கள் கருத்தை போதிக்கும் எந்திரங்களாகத் தான் இருந்தன. பிற்காலத்தில் வேதத்துக்குபின்... இதை அக்னி தத்துவத்தோடு சேர்த்து விட்டார்கள்.

எப்படி? இதை செய்த சூத்திரக்காரர்களே பச்சை யாக சொல்கிறார்கள். சூத்திரக்காரர்கள் என்றால் சூத்தி ரத்தை உபதேசித்தவர்கள்.

"வேத மந்த்ரங்கள் பிரார்த்தனை, போதனை என்ற அள வில்தான் இருக்கின்றன. இதை வெறுமனே வைத்துக் கொண்டு நாம் என்ன செய்ய முடியும்?...

அக்னியில் ஹோமம் பண்ணி நன்மைகளை பெற வேண்டும் என பழக்கம் வந்தால் சடங்குகள் இன்னும் கூடுமே. சும்மா... வாழ்க்கை முறையைப் பற்றிச் சொல் லும் மந்த்ரங்களை மட்டுமே சொல்லிக் கொண்டிருந் தால் பிழைப்பு என்னாவது.

அதற்காக "ஸ்வாஹா...' என மந்த்ரங்களை பின்னி... புதிய பண்பாட்டை வளர்த்து விட்டோம்" என்கிறார்கள் சூத்திரக்காரர்கள்.



இதன்படி...

ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள உறவை வலியுறுத்தும், நெறிப்படுத்தும் மந்த்ரங்களை சொல்ல வேண்டிய அவசியம் கிடையாது. இருந்தும், அக்னியில் ஹோமம் பண்ணும்போது... வேறு மந்த்ரங்களில் உள்ள சில கருத்தை மட்டும் சேர்த்து சடங்குகளைக் கட்டி விட்டார்கள். இந்த சடங்குகளுக்கும் அவர்கள் கூறும் மந்த்ரங்களுக்கும் நேருக்கு நேர் சம்பந்தமே கிடையாது.

இப்போது தெரிகிறதா?... மணப்பெண் மணமகன் முன்னே எப்படி அக்னி வளர்ந்தது என்று?...

கல்யாணத்தில் அக்னி வளர்ந்த கதையையும், அதன் மூலம் சடங்குகள் ஒளி பெற்றதையும் பார்த்தோம்.

சடங்குகள் எவ்வளவு மூடத்தனமாக இருக்கின்றன என்பதற்கு உதாரணங்களை பார்த்து வந்தோம்.

இதில் முழு முதல் மூடத்தனமான சடங்கு ஒன்றை இப்போது பார்க்கலாம். அதாவது நம்மூர் எலிமெண்ட்ரி ஸ்கூல்களில் "ஈயடிச்சான் காப்பி...' என ஒரு வழக்கு மொழி உண்டு.

அதென்ன ஈயடிச்சான் காப்பி? ஒரு மாணவன் பக்கத்திலிருக்கும் படித்த மாணவனைப் பார்த்து காப்பியடித்து விடுகிறான். எப்படி தெரியுமா?...

ஒரு வாக்கியத்தை எழுதும்போது அதில் ஒரு வார்த்தையை தவறாக எழுதிவிட்டதால் அதை அடித்து விட்டு திருத்தி எழுதியிருப்பான் அம்மாணவன். இதைப் பார்த்து எழுதுகிற மாணவனும்.... அதே போல தவறாக எழுதி அடித்து விட்டு மறுபடியும் சரியாக எழுதுவான். அதாவது காப்பியடிப்பதில்கூட புத்திசாலித்தனம் காட்

டாமல் எழுத்துக்கு எழுத்து அப்படியே காப்பியடிப்பதற்கு பெயர்தான் "ஈயடிச்சான் காப்பி'.

இதே தான் விவாஹ விஷயத்திலும்! விவாஹம் என்ற சொல்லுக்கு நாம் என்ன அர்த்தம் பார்த்தோம். தூக்கிக்கொண்டு ஓடுதல் என்பது. அதாவது அந்த காலத்தில்... மனதுக்குப் பிடித்தவளை தூக்கிக் கொண்டு போதல்தான் விவாஹத்தின் ஆரம்பம். விவாஹம் என்ற சொல்லே தூக்கிக்கொண்டு ஓடுவதுதான். அதற்குப் பிறகு வேதங்கள் மந்த்ரங்களால் மணமேடை அமைத்தன. அதற்கும் பின்னர் சூத்திரக்காரர்கள்... அக்னி வளர்த்து அதில் மேலும் பல சடங்குகளைக் கட்டினார்கள்.

இன்றும் "விவாஹ சுபமுகூர்த்தப் பத்திரிகை' என அச்சடிக்கிறார்கள். எவனாவது சுபமுகூர்த்தம் பார்த்து தூக்கிக்கொண்டு ஓடுவானா?... அப்பா வெளியே போயிருக்கும் நேரம் பார்த்து... அம்மா உள்ளே சமையலோ வேறு ஏதோ காரியமாய் இருக்கும் நேரம் பார்த்து...

வீட்டுப்பக்கம் வந்து கண் ஜாடை காட்டி காத்திருக்கும் காதலியை டுவீலரிலோ, ஆட்டோவிலோ, காரிலோ ஏற்றிச்சென்றால் அதுதான் விவாஹம். அதுகூட முழுமையான விவாஹம் அல்ல. அந்தக் காலம் போன்று அந்தபருவ மங்கையின் மெல்லிடையை முறிந்து விடாமல் பிடித்து வாளிப்பான கால்களில் தன் கரம் பற்றி அலேக்காக அந்த பருவப் பதார்த்தத்தை தன் உள்ளங்கையாலும் உடம்பாலும் தாங்கிக் கொண்டு ஓடினால்தான் அது விவாஹம்.

இப்போதெல்லாம் அப்படி செய்ய முடிகிறதா?... சினிமாவில் வில்லன்களும், நிஜத்தில் ரவுடிகளும்தான் இப்படி "விவாஹம்' செய்கிறார்கள்.

இப்படியொரு விவாஹத்தை பகவான் கிருஷ்ணனும் செய்திருக்கிறார்... எங்கே?...

பீஷ்மகன் என்னும் மன்னன் தன் மகள் ருக்மணிக்கு மணம் முடிப்பதற்காக பல்வேறு நாட்டு ராஜாக்களை அழைத்திருக்கிறான். ராஜசபையில் சுயம்வரம். எல்லா தேசத்து ராஜாக்களும் குழுமியிருக்கிறான்.

ருக்மணி என்னும் மலர்... யார் கழுத்தில் மாலை யிடப் போகிறாளோ? அவன்தான் ருக்மணியை சூடிக் கொள்ளும் பேறு பெறுவான். ருக்மணியின் அண்ணன் ருக்மியோ, தன் தங்கையை கிருஷ்ணனின் அத்தைப் பிள்ளை சிசுபாலனுக்கு கொடுக்க முடிவு செய்திருந் தான். எல்லா மன்னர்களும் வந்து என்ன பிரயோஜனம். சுயம்வர நாயகி ருக்மணி...?

முதல்நாள் இரவே... ஒரு பிராமணன் மூலமாக தூது அனுப்பப்படுகிறது. "பக்கத்திலுள்ள கோயிலுக்கு வந்து விடு. நான் காத்திருக்கிறேன்' இதுதான் பிராமணன் விடு தூது சொன்ன செய்தி.

ருக்மணி கோயிலுக்கு வந்தாள். கிருஷ்ணனும் வந் தான். தன் ரதத்தில் தூக்கிச்சென்றுவிட்டான்.

இது கதை... இதில் கிருஷ்ணன் செய்தானே அது விவா ஹம்.

இன்றும் செய்கிறார்கள்... என்னுடைய புத்ரியான செளபாக்யவதி புஷ்பாவை (ஒரு பெயருக்கு வைத் துக்கொள்ளுங்கள்) ஸ்ரீ ராமசாமியின் புத்ரன் சிரஞ்சீவி முரளி நிகழும் விய வருஷம் தை மாசம் 10-ந்தேதி காலை 8.00-க்கு மேல் 10.00-க்குள் சுபயோக சுபதினத்தில் தூக் கிக்கொண்டு ஓடப்போகிறான்.



தேவரீர் குடும்பத்தோடு வந்திருந்து அவன் என் பெண்ணை தூக்கிக்கொண்டு ஓடுவதைப் பார்த்து அட் சதை போட்டு ஆசிர்வதிக்க வேண்டும் -என்று கல்யா ணப் பத்திரிகை அடித்தால் விவாஹ முகூர்த்தம் என்பதற்கு பொருத்தமாக இருக்கும்.

சரி அந்த ஈயடிச்சான் காப்பி சடங்குதான் என்ன?...

இன்று நாள்பார்த்து, நட்சத்திரம் பார்த்து, ஆள் பார்த்து, குடும்பம் பார்த்து, பையன் என்ன வேலை பார்க்கிறான் என பார்த்து, மண்டபம் பார்த்து, வாத்யம் பார்த்து, எந்த சமையல்காரனிடம் கொடுத்தால் விருந்து சுவையாக இருக்கும் என விசாரித்துப் பார்த்து...

இத்தனையும் பார்த்து கல்யாணம் பண்ணிவிட்டு 'தூக் கிக் கொண்டு ஓடறான்' என சொல்வது முட்டாள்தனம் அல்லவா?...

இந்த முட்டாள்தனத்தை நியாயப்படுத்துவதற்காகவே ஒரு சடங்கும் பின்னப்பட்டது. அது என்னவென்றால்... மணப்பெண்ணின் மாமா பெண்ணை தன் தோளில் தூக்கிக்கொள்கிறார். மணமகளின் மாமா அவனைத் தன் தோளில் தூக்கிக் கொள்கிறார். ரெண்டுபே

ரும் மணமகளையும், மகனையும் தோளில் தூக்கிக் கொண்டு... அந்த சிறு பரப்பு கொண்ட மணமேடையில் இப்படியும் அப்படியுமாய் நகர... அப்போது மாலை மாற் றிக் கொள்கிறார்கள். இதுதான் விவாஹமாம். அதாவது தூக்கிக்கொண்டு ஓடுவதாம்.

அடப்பாவிகளா?... வீரத்தை இப்படியா கேவலப்படுத்து வது. அந்தக் காலத்தில் அவனுக்கு தேவையிருந்தது. பெண்ணை தூக்கிக் கொண்டு ஓடினான்.

இன்றுதான் அதற்குத் தேவையில்லையே. பின் ஏன் விவாஹம் என வைத்து தூக்கிக்கொண்டு ஓடுவதைப் போல பாவலா செய்கிறீர்கள். இதற்கு வாத்யார் மந்த்ரம் வேறு ஓதுகிறார். இது ஒன்று என்றால்... இன்னொரு மூடச்சடங்கு.

இதுபற்றி நான் இந்துமதம் எங்கே போகிறது முதல் பாகத்திலேயே சொல்லியிருப்பேன். இருந்தாலும் இங்கே விவாஹத்தைப் பற்றி குறிப்பாகப் பார்ப்பதால் அதை சற்றே நினைவு கூர்கிறேன்.

கல்யாணத்தில் பெண் நன்றாக இல்லை, மாப்பிள்ளை நன்றாக இல்லை... என்றால் கூட பிரச்சினை வராது. ஆனால்... சாப்பாடு நன்றாக இல்லை என்றால் போரே வெடிக்கும். இதனால் விருந்தோம்பலை தமிழ்ப்பண் பாடு காலச்சிறப்பாகச் செய்தது; செய்து வருகிறது. இப்போதைய கல்யாணச் சடங்குகளே... தமிழர்களின் தாராள விருந்தோம்பலுக்கு சாட்சி.

கல்யாணத்தில் தேங்காய் உருட்டுவதைப் பார்த்திருப் பீர்கள். மணப்பெண்ணும், மணாளனும் பந்து உருட்டு வதுபோல் தேங்காய்களை உருட்டிக்கொண்டிருப்பார்

கள். இது ஒரு சடங்கு... இதற்கொரு விளக்கமா?... என்று கேட்கிறீர்களா?...

பெண்ணும், மாப்பிள்ளையும் தேங்காய் உருட்டும் போது வாத்யார் கௌஹீ... கௌஹீ... என்ற சொற்களை உச்ச ரிக்கும்படியாக மந்த்ரங்களை எடுத்துச் சொல்கிறார்.

"ம்... வெட்டு வெட்டு மாட்டை நன்றாக வெட்டு. கத்திய தீட்டிக் கொண்டாயா?... ஒரே வெட்டில் கழுத்து துண் டாகி தலை தனியா வந்து விழணும். ம். . . தாமதமாக் காதே ரத்தத்தை அப்படியே பிடி... வெட்டின மாட்டை எடுத்துக் கொண்டு போய் துண்டு போடுங்க. சீக்கிரம்... மாட்டுக் கறிப்பா வேக... லேட் ஆகும். நன்னா வேக வச்சு ஊட்டுங்கோ. அம்பி... பீஃப் சாப்பிடணும். ம்... சீக்கிரம்....".

இந்த வார்த்தைகளை கல்யாணம் நடத்தி வைக்கும் பிராமணர்... மணமேடையில் சொன்னால் உங்களுக்கு எப்படியிருக்கும்? சொல்கிறார். இந்த அர்த்தம் வரும்படி யாக சமஸ்கிருதத்தில் மந்திரம் சொல்கிறார். ஆனால்... அந்த நேரத்தில் மணப்பெண்ணும், மணப்பையனும் தேங்காய் உருட்டி விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.

"என்னடா இது அய்யர் மாடு வெட்டச் சொல்றார். நாம தேங்காய் உருட்டிக் கொண்டிருக்கிறோமே...' என அந்த மணமக்களுக்கும் தெரிவதில்லை. "அடாடா... நாம சொல்ற மந்த்ரம் மாடு வெட்றதப் பத்தியா?... அய் யய்யோ... அப்புறம் அவா தேங்கான்னா உருட்டிண்டி ருக்கா..." -என அதை உச்சரிக்கிற வாத்யாருக்கும் அறி வதில்லை.

அப்படியென்றால், ஆமாம்... யாருக்கும் தெரியாமல்... சிலருக்கு தெரிந்தும் தெரியாமல்தான் நடக்கிறது இந்த மதுவர்க்கம்.

மது வர்க்கம் அல்லது மதுபர்க்கம் என்றால் விருந்தோம்பல். இது கல்யாணத்திற்கு வருகின்ற விருந்தாளிகளுக்காக பொதுவாக ஏற்பட்டுள்ள ஒரு காரியம். விருந்தாளி என்றால் பெண் வீட்டாருக்கு அங்கே மாப்பிள்ளைதான் முதல் விருந்தாளி.



அவருக்கு அடுத்தாற்போல முக்கியஸ்தர்கள், ஊர்ப் பெரியவர்கள் ஆகியோரை வரவேற்று உபசரிப்பார்கள். ஊரின் தலைவர் அல்லது நாட்டின் தலைவனான ராஜாகூட திருமணத்திற்கு வரலாம். அப்போது அவர்களுக்கும் உபசரிப்பு உயர்வாக இருக்க வேண்டும் அல்லவா? இந்த உபசரிப்புதான் மதுவர்க்கம்.

இப்போதுள்ள கல்யாணத்தில் சாப்பாடு, வெத்திலைப் பாக்கு, பீடா, ஐஸ்க்ரீம் என என்னென்னவோ வந்துவிட்டது. ஆனால் இந்த மதுவர்க்கம் என்ற சடங்கின் மந்த்ரம் என்ன சொல்கிறது தெரியுமா?

பழங்காலத்தில் ரிஷிகள், பிராமணர்கள் உள்ளிட்டோர் மதுவர்க்கம் எப்படி செய்தனர் என்பதை 'உத்தரராம சரித்திரம்' என்ற நாடகத்தில் பவபூதி என்ற கவி மிக ஸ்பஷ்டமாக தத்ரூபமாக சொல்கிறார். அந்த நாடகக்

காட்சியை உங்கள் மனத்திரையில் விரிக்கிறேன் பாருங் கள்.

ஒரு ஆசிரமம். அங்கே பல சிஷ்யர்கள் ஆச்சார்யரிடம் வித்தையைக் கற்றுக்கொள்வதற்காக வந்திருக்கிறார் கள். அவர்களில் ரெண்டுபேர் ஆசிரம வாசலில் நின்று பேசிக்கொண்டிருக்கிறார்கள்.

"டேய்... விருந்தாளிகள் நம்ம ஆசிரமத்துக்கு வந்திருக் காளே... பாவம். இன்னிக்கு எத்தனை கன்னுக்குட்டி கள் மோட்சத்துக்கு போகப்போறதோ?"

"ஆமாண்டா பக்கத்து கிரஹத்துல (வீடு) கூட கல்யா ணம். அங்கேயும் ஒரே கன்னுக்குட்டி வாசனைதான். விருந்து ஜமாய்க்கிறா போலிருக்கு."

அந்த நாடகத்தின் ஒரு காட்சியில் அந்த சிஷ்யர்கள் இப் படி சம்பாஷணை பண்ணுகிறார்கள்.

ஆமாம். மதுவர்க்கம் என்றால் கல்யாணத்தில் மாப் பிள்ளை, பெண் மற்ற முக்கியஸ்தர்கள் எல்லோருக்கும் மாட்டுக்கறி விருந்தளிக்க வேண்டும். மணப்பெண் வீட் டார் 'மாட்டுக்'கறி விருந்து கொடுப்பதால்தான் மருமக ளுக்கு மாட்டுப்பெண் என்று பெயர் வந்ததோ?

இது பயங்கரமான கர்மா. பசுமாடு வந்து நிற்கிறது. கத் தியைத் தீட்டிக்கொண்டு ஒருவன் வந்து நிற்கிறான். அவன்தான் அந்த பசுவைக் கொன்று கொண்டுவந்து மாப்பிள்ளைக்கு விருந்து கொடுக்க வேண்டும். மற்ற விருந்தினர்களுக்கு வேறு மாடுகளை அடிக்க வேண் டும்.

அன்று சில புரட்சி மக்கள் இதை எதிர்த்தார்கள். அந்தக் காலத்தில் கோவதம் கூடாது என்ற கட்சியும் இருந்தது. அது பொதுவாக என்ன சொன்னதென்றால்...

டேய்... வெட்டாதீங்கடா, அது கோமாதா. ருத்ரர்களுக்கு மாதா. ஆதித்யர்களுக்கு தங்கை. உன்னை நோக்கி வேகமாக வந்து முட்டி உனக்கு ஆபத்து உண்டுபண்ணு மானால் அவளைத் தண்டிக்கலாம். கோமாதா... நாம் அமரத்துவத்தை அடைய நாபியாக இருப்பவள்.

கேட்கும் ஜனங்களுக்கு சொல்கிறேன். பசுமாட்டை வெட்டாதீர்கள். அது நிரபராதி. புல்லைத்தின்று விட்டு தண்ணீரைக் குடித்துவிட்டு தன்வழியே போகட்டும். தெய்வத்தன்மை உடையவள்..." -என பசுவை தோழி யாகவும், தெய்வமாகவும் ஒரு கூட்டம் வரித்துகொண்டு கிளம்பினார்கள். மேலும்... "பசுவை அடிச்சு சாப்பிட றதா? உன்னை அடிப்பேன்" என ரிஷிகளையும் பிராம ணர்களையும் திரட்ட, காலக்கிரமத்தில் இது நின்றது.

எப்படி நின்றதென்றால் கல்யாணவீடு பக்கத்தில் மாடு வெட்டாமல் வேறு இடத்தில் வைத்து வெட்டி மாமி சத்தை மட்டும் கொண்டு வருவது என பழக்கமானது. காலப்போக்கில் அதுவும் நின்றுபோய்... மாட்டுக்குப் பதி லாக தேங்காயை கொண்டு வந்து அதை உருட்டி விளையாடி பின் உடைத்துவிடுவது என பழக்கப்படுத் தினார்கள் சூத்திரக்காரர்கள்.

ஆனால் இன்னும் அந்த நேரம் வாத்தியார் ஓதும் மந்த் ரம் "பசுவை அழைத்து வந்து வெட்டு' என்கிறது.

மாமிசம் இல்லாமல் போனால் மதுவர்க்கமே இல்லை என்று சொல்லிவிட்டார்கள் சூத்திரக்காரர்கள். ஆனால் இன்றும் மாடுவெட்டும் மந்திரத்தை மட்டும் சொல்தேங் காய் உருட்டுவது ஏன்? பேசாமல் அம்மந்திரத்தை நிறுத் திவிடலாமே?

தேங்காய் உருட்டச் சொல்லிவிட்டு கடைசியில் அந்த தேங்காய்களை வாத்தியார் பையில் எடுத்துப்போட்டுக் கொள்வதற்காகத்தான் இன்றும் சொல்கிறார்களா?

அடுத்து...?

நான் இண்டர்நெட்டில் சடங்குகளின் கதையை எழுதி வருகிறேன் அல்லவா?... ஒரு வெளிநாட்டு நண்பர் பெயர் சுரேஷ்குமார் என்று நினைக்கிறேன். ஜெர்மன் தேசத்திலிருந்து எனக்கு ஈ-மெயில் அனுப்பியிருக்கி றார்.

ஒரு டவுட்டாம்?... என்ன கல்யாண மேடைகளில் மாப் பிள்ளை-பெண்ணுக்கு முன்னால் ஒரு சொம்பு அதில் நூல் சுற்றி மாவிலைகள் சிலவற்றை நுழைத்து தண்ணீ ரால் சொம்பை நிரப்பி வைத்திருக்கிறார்களே?... அது ஏன்?...



இதுதான் அந்த லௌகீகனின் சந்தேகம். இதற்கு மேல் நான் சொல்கிறேன். அந்த சொம்பை எடுத்து அடிக்கடி மாவிலை நுனியால் தீர்த்தத்தை மாப்பிள்ளை தலை யிலும், பெண் தலையிலும் வாத்யார் புரோ க்ஷிப்பார். அதாவது தெளிப்பார். அப்போது அவர்கள் கைகூப்பிக் கொள்வார்கள். பார்த்திருக்கிறீர்களா?...

இதற்கு புண்யாஹ வாசனக்கும்பம் என்று பெயர். அந்த சொம்புக்கு மாலை போட்டு குங்குமப்பொட்டு வைத்து, சந்தனப்பொட்டு வைத்து சொல்லப்போனால் மணப் பெண் அளவுக்கு அலங்காரம் செய்து வைத்திருப்பார் கள்.

இது எதற்கு என்றால் அந்த இடத்தை புண்ணியப்ப டுத்த வேண்டுமாம். கல்யாணம் என்றால் ஏற்கனவே நாம் பார்த்தோம். நல்ல காரியம் செய்வது என்று அர்த் தம். அப்படியிருக்க நல்ல காரியம் செய்யும் இடமென் றாலே புண்ணியம் தானாக வருமே. எக்ஸ்ட்ரா புண்ணி யம் சேர்க்கத்தான் இந்த சொம்பா?...

சொம்புக்குள், உள்ள தண்ணீருக்கு அப்படி என்ன விசேஷம்? மாவிலைகளை எடுத்துப் பார்த்தால் தெரி யாது.

மனத்தில் விழுந்து கிடக்கும் அறியாமை இலைகளை எடுத்துப் போட்டால்தான் இதற்கான உண்மை விளங் கும்.

அதாவது... புண்யாஹ வாசன கும்பமாகிய அந்த சொம் பால் இடமே சுத்தியடைகிறது. புண்யாஹ வாசனம் என்ற சொல்லுக்கு... 'நல்ல நாள் நல்ல நாள்... நல்ல நேரம், நல்ல இடம், எல்லாம் நல்லதே...' என அர்த்தம். இதை பிராமணன்தான் சொல்ல வேண்டுமாம்.

ஏன்?...

அந்த காலங்களிலிருந்து நட்சத்திரங்களின் சஞ்சாரங் கள் தான் முக்கியமாக இருந்து வருகிறது. அந்தந்த நட்சத்திரங்கள் அனுகூலமாக இருக்கும் போது செய் தால் வேண்டிய பலன் கிடைக்கும். அப்படி இல்லாமல் போனால் நாம் செய்யும் கர்மாவுடைய பலன் நமக்கு

கிடைக்காமல் போய்விடும். இது பிற்காலத்தில் சூத்திரக் காரர்கள் சொல்லும் வியாக்யானம்.

ஆனால் வேதம் என்ன சொல்கிறதென்றால்... இந்த கர் மாவை இதற்கென விதித்துள்ள காலத்தில் செய்தால் பலன் நிச்சயம் என்று சொல்கிறது. ஆனால் நட்சத்திரங் களுக்கு முக்யத்துவம் கொடுத்த சூத்திரக்காரர்களோ... நன்மை நட்சத்திரம் மூலம்தான் வரும் என்று சொல்கி றார்கள்.

ஆனால், அந்த நட்சத்திரங்களின் சஞ்சாரம் எப்படி இருக்கும் என்று தீர்க்கமாகவோ, திட்டவட்டமாகவோ கூறமுடியாது. சில நட்சத்திரம் புண்ணிய நட்சத்திரமாக இருக்கலாம். சில நட்சத்திரங்கள் அப்படி இல்லாமல் இருக்கலாம்.

ஆனால்... இவை என்ன வாய் திறந்து சொல்லவா போகின்றன? அவை பேசுவது இல்லை. மொத்தமுள்ள 27 நட்சத்திரங்களில் எதுவும் பேசாது.

அதற்காக நாம் ஏன் வருந்த வேண்டும்?... பேசும் நட்சத் திரம் நம்மிடம் இருக்கிறதே...' என்னது... பேசும் நட்சத்தி ரம் நம்மிடம் இருக்கிறதா? யார்?

ரஜினியா... கமல்ஹாசனா...? என்கிறீர்களா? நீங்கள் கேட்பது பேசும் சினிமா நட்சத்திரங்கள். அவை பேசும், பாடும், ஏன் ஆடக்கூட செய்யும்.

ஆனால்... புண்யாஹ வாசன சடங்கில் பேசும் நட்சத்தி ரம்?

அந்த பேசும் நட்சத்திரம் பிராமணன்தான். மொத்தம் 27 நட்சத்திரங்கள். அவைகளில் எதுவும் பேசுவதில்லை.

28-வது நட்சத்திரம், பேசும் நட்சத்திரம் பிராமணன்தான்.

அவன் வாய் மூலமாக சிவம் அதாவது மங்களம் என்ற வார்த்தையை உச்சரிக்க வைத்தால் அந்த இடம், அந் தச் சடங்கு புனிதமாகிவிடுமாம். என்ன கண்டுபிடிப்பு பாருங்கள்?

இது பிராமண்யம் மேக்கரித்துப் பேசிய வார்த்தை. வைதீக மதத்தில் பேசும் தெய்வம், நடமாடும் தெய் வம், அனுக்ரஹம் பண்ணும் தெய்வம், பிராமணன்தான். ஆகவே ஒன்றுக்கு மேற்பட்ட பிராமணர்களை கூட்டி நிற்க வைத்து... அவர்கள் சுபம், சுபம்... என்று சொன் னால் அதுதான் புண்யாஹ வாசனம்.



அட நீயே தெய்வம் என்றால்... நீ எதற்கு தெய்வ வழிபாடு செய்கிறாய்? என்ற ஒரு கேள்வி எழத்தானே செய்கிறது?

அதாவது புண்யாஹ வாசனம் என்ற சொம்பை கல்யா ணத்தில் மட்டுமல்ல சுபகாரியங்கள் பலவற்றிலும் நீங் கள் காணலாம். எதற்கு என்றால்...

"நீ உன் கைக்காசை போட்டு என்னதான் பிரம்மாண் டமாக விழா நடத்தினாலும்... நான் வந்து சொன்னால் தான் நீ புண்ணியம் அடைய முடியும். இல்லையென்றால் நீ செய்வதெல்லாம் வீண்தான்..." என பிராமணர்கள்

அல்லாதவர்களைப் பார்த்து ஒரு சொம்பு மிரட்டுகிறது. ஒரு சொம்பு கொக்கரிக்கிறது.
வேகம் கொடுத்த இந்த புண்ணியத்திமிரை வைத்துக் கொண்டு... இன்றைய பிராமணன், புரோகிதம் செய்யும் பிராமணன் என்ன செய்கிறான்?

"அந்த சொம்பின் கீழ் ஒரு துளி வாழை இலையைப் போடு... அதில் அரிசியைப் போடு... மேலே தேங்காயை வை...' என எக்ஸ்ட்ரா ஃபிட்டிங்ஸ் (Extra-Fittings)களை ஏற்றுகிறான். எதற்கு? தன் வீட்டு உபயோகத்திற்காகத் தான்.

ஒரு சாதாரண சொம்பு... தண்ணீர் நிரப்பி வைத்த சொம்பை வைத்து என்னமாய் மிரட்டி காரியம் சாதித்தி ருக்கிறார்கள் பாருங்கள்.

இன்னொரு முறைகேடும் இதில் நடக்கிறது. என்ன வென்றால் சுபம்... சுபம்... என்று சொன்னதோடு மட் டுமல்லாமல்... வருணனைப் போற்றி மந்த்ரங்களை ஜெபிக்கிறார்கள். ஆனால், இந்தச் சடங்கில் தேவையே இல்லாமல் வருணனை போற்றிப் புகழ்கிறார்கள். இதன்பிறகு "உதக சாந்தி' என்னும் ஒரு மந்த்ரத்தை ஜெபிக்கிறார்கள்.

இது எதுக்குய்யா என்று கேட்டால் ம்... சும்மா இருப்பா. போதாயண சூத்திரத்தில் சொல்லியிருக்கு என்கிறார் கள். போதாயண சூத்திரம் என்றால் அது போதாய ணர்களுக்கு மட்டும்தான். சரி... அப்படியே வைத்துக் கொண்டாலும் போதாயண சூத்திரம் சொன்னவற்றை யெல்லாம் செய்வியா?... "கல்யாணம் முடிந்ததும் பெண் ணும் மாப்பிள்ளையும் போய் மீன்பிடித்து வரவேண்டும்' என்று போதாயணர் தன் சூத்திரத்தில் சொல்லியிருக்கி

றார். ஏன்?... நீ கல்யாணம் முடிந்ததும் போய் மீன்பிடிக்கச் சொல்லேன்.

இப்படியாக இஷ்டத்துக்கும் சடங்குகளைப் பண்ணி வருகிறார்கள். கேட்டால்... எல்லாம் 'பெரியவா சொன்னது' என்கிறார்கள். இப்படி தேவையே இல்லாத சடங்குகளை எல்லாம் நாம் பண்ணுகிறோம். ஆனால் கல்யாணத்தில் முன்பு இருந்த வேதம் சொன்ன முக்கிய நிகழ்வை நாம் இப்போது மறந்துவிட்டோம்.

அது?... நாட்டியம்தான்.

ரிக் வேதத்தில்... த்வஷ்டா தன் பெண்ணுக்குக் கல்யாணம் நடத்தினான் பாருங்கள். ஆடம்பரம், அப்பேர்ப்பட்ட ஆடம்பரம். அந்தக் கல்யாணத்தை பார்ப்பதற்கு உலகமே திரண்டு வந்தது.

இதே போலதான் சபிதாவுடைய கல்யாணம், சூர்யாவுடைய கல்யாணம்... வேதம் சொல்லும் இக்கல்யாணங்களின் சிறப்பு என்னவென்றால்,

வந்தவர்கள் எல்லாரும் கொண்டாட்டமாக களிப்போடு ஆடிக் கொண்டிருக்கிறார்கள். மணப்பெண், மறுநாள் மணரதத்தில் ஏறிப் போகவேண்டும். அவள் இன்றே தன் மனோரதத்தில் ஏறிப் பறக்கிறாள். அவளின் மனோரதம் கூட சும்மா போகவில்லை. அவளுடைய மனம் என்னும் ரதத்தை ரிக், சாமம் என்ற மாடுகள் இழுத்துக்கொண்டு ஆடியபடியே ஓடுகின்றன. எங்கும் நாட்டியம், எதிலும் நாட்டியம்.

மணப்பெண்ணுக்கு சேலைகள் செய்ய நிறைய பேர் உண்டு. ஒருத்திக்கு பெயர் காதா. இவள்தான் மணமகளுக்கு புடவை கட்டி விடுவாள். இன்னொருத்தி அலங்

காரம் பண்ணுபவள். இன்னொருத்தி மணப்பெண் சொல்பவற்றை கேட்டு பணிவிடைகள் செய்வதற்காக.

இப்படி கல்யாண வீடு முழுவதும் கலகலப்பான நாட்டி யம்தான்.

எந்தெந்த முட்டாள்தனமான சடங்குகளையெல்லாம் இழுத்துப் பிடித்துக் கொண்டிருக்கிற நாம்... இந்த நாட்டி யத்தை மட்டும் நழுவ விட்டு விட்டோமே.

கல்யாணத்தில் இனியாவது களிப்புடன் ஆடுவோம்... மங்கள கீதங்கள் பாடுவோம். இந்த நேரத்தில் உங்க ளுக்கு ஒரு சந்தேகம் வந்தது. எனக்கு கடிதங்களாக வந்தது.

சடங்குகளின் கதையில்... கல்யாணச் சடங்குகள் பற்றி சொல்லிவிட்டீர்கள். ஆனால்... "சடங்கின்' கதை பற்றி கூறவே இல்லையே. "சடங்கு' ஆனால்தானே கல்யா ணமே பண்ணமுடியும்.

சரியான கேள்வி...



சடங்கு ஆனால்தான், அதாவது ருது ஆனால்தான் திருமணம் செய்யமுடியும் என்பது நாகரிக அறிவின் வளர்ச்சி. ஆனால் அன்றைய காலங்களில் கல்யாணத்

துக்கு ருதுவாகியிருக்க வேண்டும் என அவசியம் இல்லையே. பெண்ணை சிறு வயதிலேயே கட்டிக் கொடுத்து விடுகிறார்களே. அதனால் "ருது' பற்றிய சடங்குகள் இப்போது மக்களிடம் இருக்கும் அளவுக்கு... அக்காலத்தில் இல்லை.

அவள் ஒரு சந்ததியை உருவாக்கத் தகுதி பெற்றவளாகி விட்டாள் என்பதற்கான கொண்டாட்டம்தான் "சடங்கு'. மத்தபடி அது சடங்கு அல்ல.

இதுவரை நமது வாழ்வின் முக்கிய அம்சமான கல்யாணச் சடங்குகளைப் பார்த்தோம். அவை எப்படி உரு மாறி, எப்படி தடம்மாறி இன்று நம் முன் நிற்கின்றன. நாம் எப்படி அவற்றின் முன் நிற்கிறோம் என்பதைப் பற்றி எல்லாம் விஸ்தாரமாகப் பார்த்தோம்.

இப்போது மகா பெரிய சடங்கை உங்கள் முன் உரித்துக்காட்டப் போகிறேன். இதில் 'உரித்துக்காட்டப் போகிறேன்' என்ற பதத்தை கொஞ்சம் அழுத்தமாகவே ஞாபகப்படுத்தி வைத்துக்கொள்ளுங்கள்.

அதென்ன மகாபெரிய சடங்கு?

சோமயாகம். ஆமாம். யாகங்களுக்கெல்லாம் அடிப்படையானது இது. இன்று எந்த விசேஷமானாலும் கோயில் கும்பாபிஷேகங்களில் எல்லாம் (கும்பாபிஷேகம் பற்றி பிறகு நாம் காணலாம்) ஒன்று உருவாக்குகிறார்கள் அல்லவா? இதற்கெல்லாம் மூலாதாரமான யாகம் சோமயாகம்.

வேதம் வலியுறுத்திச் சொல்கிற இந்த யாகத்தின் அடிப்படையிலேதான் மற்ற யாகங்கள் முளைத்தன. கல்யாணத்தில்கூட... "நாம் என்ன செய்கிறோம்' என்று தெரி

யாமலேயே பல வாத்தியார்கள் சோமயாகம் செய்து வைத்தபடி இருக்கிறார்கள்.

சென்னையின் மேற்கு மாம்பலத்தில் கல்யாணம் செய்து வைத்தே வீடு கட்டிவிட்ட சில வாத்தியார்களுக்கும்கூட சோமயாகம் பற்றிய விஷய அறிவு இல்லை. தம்பதி சமே தராக ஆன பின்னர் இந்த யாகத்தைப் பண்ணியே ஆக வேண்டும். ஆனால்... இவ்வளவு பெரிய யாகத்தை இப் போதெல்லாம் பண்ண முடியாது என்பதால் சும்மா மந் திர ரீதியாக பண்ணிவைத்துவிடுகிறார்கள்.

ஆனால் தனியாக சோமயாகங்கள் இன்னும் நிறைய நடக்கின்றன. லோகக்ஷேமத்துக்காக என்ற பெயரில் நான்கூட மகாசோம யாகங்களை நடத்தி வைத்திருக்கி றேன். இந்த யாகத்தைப் பற்றி நீங்கள் அறிந்துகொண் டால் இன்று நடக்கும் வெவ்வேறு யாகங்களைப் பற்றி எளிதாக புரிந்துகொள்ளலாம்.

"சோமே தேனும்
சோமே ஷர்வந்த மாசம்
சோமோவீரம் கர்மன்யந் ததாது
சாதன்யம் விதத்யம் சயேயம்
பிது ஸ்வரணம் மேவததா தஸ்மஹே

-இதுதான் சோமயாக கருத்துக்களின் உள்ளடக்கம்.

இப்படியென்றால் என்ன?

இது Prayer. தேவதைகளிடம் மக்கள் சார்பாக பிராம ணன் வைக்கும் கோரிக்கைகள்.

"எந்தக் காரியத்தையும் தடைகள் பல வந்தாலும் கூட அவற்றைத் தகர்த்து நிறைவேற்றத்தக்க வீரமுள்ள மகன்களை எங்களுக்குக் கொடு.

அவன் அறிவாளிகள் சபையில் ஏறி வாதம் செய்யும் அறிவு பெற்றவனாக இருக்கவேண்டும். அரசியல் பேச வேண்டும். அப்பா சொல்வதைக்கேட்கும் பிள்ளையாக இருக்கவேண்டும்.

பிள்ளைகளோடு நல்ல திடகாத்திரமான பசுக்களை எங்களுக்குக் கொடு. அத்தோடு வேகமாக ஓடக்கூடிய வலிமையான குதிரைகளையும் கொடு.

இதையெல்லாம் நாங்கள் சும்மா கேட்கவில்லை. உனக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்துவிட்டுத்தான் கேட்கிறோம்..."

இதுதான் Soman Prayer.

சோம யாகத்துக்கு ஏன் இந்த பெயர் ஏற்பட்டது? இதன் கதை கொஞ்சம் சுவாரஸ்யமானது. இதற்காக நீங்கள் இமயமலை வரை வரவேண்டும். பனிபடர்ந்த இமய மலை காடுகளில் நிறைய மரங்கள், செடிகள், கொடிகள் அடர்ந்து கிடக்கும். இப்போதே இப்படியென்றால்... பழைய பழங்காலத்தில் எப்படி இருந்திருக்கும் என யூகித்துக்கொள்ளுங்கள்.



இந்தச் செடி கொடிகளுக்கிடையே அபூர்வமான அதிசக்தியுள்ள ஒரு கொடிதான் சோமக்கொடி. அதன்

இலைகள் பிரகாசிக்கும். வெள்ளைப்பூக்கள் மின்னும். அதை ஒரு பறவைக்கொத்திக்கொண்டு இமயமலையி லிருந்து புறப்படுகிறது.

புறப்பட்டு...

இமயமலையிலிருந்து புறப்பட்ட சோமச்செடிகளை அலகில் கொத்திக்கொண்ட பறவை... அதை மலையின் அடிவாரத்தில் மக்கள் வசிக்கும் இடத்தில் கொண்டு வந்து போடுகிறது.

இதை ரிஷிகள் பார்க்கிறார்கள். இந்தச் செடியில் ஏதோ விசேஷம் உள்ளது என அவர்கள் அறிகிறார்கள். பறவை கடித்த இடத்திலிருந்து அந்தக் கொடியின் சாறு சில துளிகள் வழிய... அதை நக்கிப் பார்த்தால் அமிர்தம்.

இந்த நேரம் தேவதைகள் அந்தக் கொடியைச் சுற்றி நிற் கின்றனர். "நீங்கள் ஏன் இங்கு வந்தீர்கள்?' என அந்த ரிஷி கேட்க...

"இது சாதாரண கொடியல்ல. சோமக் கொடி. இந்த சோமக் கொடியை பிழிந்தால் வரும் ரஸம் இருக்கிறதே... அது அமிர்தத்துக்கு சமமானது. இந்த சோமக்கொடி யைப் பிழிந்து... அதிலிருந்து சோம ரஸத்தை எடுத்து எங்களுக்கு யாகம் பண்ணுங்கள். அது சோமயாகமாகட் டும். யாம் உங்களுக்கு மற்றதை அருள்கிறோம்..."

என சொன்னார்களாம் தேவதைகள்.

இந்த தேவதைகள் என்றால் சித்திரத்தை பார்த்துவிட்டு நீங்கள் என்னென்னமோ கற்பனை பண்ணிக்கொள் ளாதீர்கள். அக்னி, உஷஸ், சூரியன் ஆகியவைதான். அதாவது இயற்கையைதான் அன்று அவர்கள் தேவ தைகளாக உருவகப்படுத்திக் கொண்டனர்.

அக்னி என்றால் நெருப்பு. உஷஸ் என்றால் சூர்யோத யத்துக்கு முன் வைகறைப்பொழுது என்கிறோமே அது தான். சூர்யன் என்றால் கதிரவன். இவர்கள்தான் தேவ தைகள்.

இந்தக் கதை ஒரு முட்டாள்தனமாக இருக்கலாம். புனைவாக இருக்கலாம். இக்கதையை நான் ஏன் சொன்னேன் என்பதைப் பொறுத்திருந்து பாருங்கள்.

சரி, சோமயாகத்துக்கு வருவோம். இது மிகப் பெரிய யாகம் என்று சொன்னேன். அதாவது 5 நாட்கள் தொடர்ந்து நடக்கும். மொத்தம் குறைந்த பட்சம் 16 பேர் இதை பண்ணி வைக்க வேண்டும்.

முதல்நாள் தீட்சை... யாகத்துக்கு தயார் செய்தல். 2-வது நாள் ப்ராயணீயம். அதாவது ஆரம்பித்து, விருந்தினர்க ளையெல்லாம் உட்கார வைத்தல்.

இதன் பின் சோமரஸம் தயாரிக்க வேண்டும். இதற் கான சோமக் கொடியை சும்மா வாங்கக்கூடாது. பத்து விதமான பொருள்களை விலையாகக் கொடுத்துதான் சோமக்கொடியை வாங்கணும்.

என்னென்ன?... அஜதேனு சவத்ஸா... போய்க் கொண்டே இருக்கிறது.

ஆடு, காளை மாடு, பசுமாடு, துணி, வாசனை திர வியங்கள், குதிரை... இப்படியாக பத்து பொருட்களை விலையாகக் கொடுத்துதான் சோமக் கொடியை வாங்க வேண்டும். இந்த சோமக் கொடியை தண்ணீர் விட்டு மண்ணில் ஊன்றி ஒருநாள் வரை வைக்கவேண்டும். ஆயாச்சா?... 3 நாள் ஆகிவிட்டது இதற்கே.

தண்ணீர் ஊற்றினால் சோமக்கொடி மேலும் வளரும். ரஸம் இன்னும் கொஞ்சம் அதிகமாகக் கிடைக்கும்.

சோமக்கொடி வளர்ந்து கொண்டிருக்கட்டும். அதற்கிடையே... சோமயாகத்தைப் பற்றிய இன்னொரு கிளைக் கதையைப் பார்ப்போம். கிளைக்கதை என்றாலும் இது முக்கியமானது. கவனமாகக் கேளுங்கள்.

சோமயாகம் நடைபெறும் செய்தி கேட்டு விஷ்ணு அங்கே வருகிறார். இந்துமதம் எங்கே போகிறது பாகம்-1லேயே பார்த்தோம். யாகம் என்றால் விஷ்ணு. விஷ்ணு என்றால் யாகம் என்று.

இதை ஞாபகம் வைத்துக் கொண்டு இப்போது சோம யாகம் நடக்கும் இடத்துக்கு மறுபடியும் வாருங்கள்.

யாகமே உருவான விஷ்ணு தனுஸோடு அதாவது வில்லோடு வந்து நிற்கிறார். எப்படித் தெரியுமா?...

வில்லின் வளைந்த மூங்கில் பாகத்தின் ஒருமுனை தரையில் இருக்கிறது... இன்னொரு முனை விஷ்ணுவின் தாடையில் இருக்கிறது. இந்த முனைகளுக்கிடையேதான் நாண் எனப்படும் கயிறு இழுத்துக் கட்டப்பட்டுள்ளது. வில்லை தன் தாடை மூலமாகவே நிலைநிறுத்தி ஸ்டைலாக நிற்கிறார் விஷ்ணு.

அவரது கோரிக்கைதான் என்ன?... "யாகத்தின் சோமரஸம் முழுவதும் எனக்கே கிடைக்கணும். மற்ற தேவதைகளுக்குக் கொடுக்கக்கூடாது..."

என்னடா இது... விஷ்ணுவே இப்படி பண்ணுகிறாரே... என யாகம் நடத்துபவர்கள் முழிக்க...



அந்த நேரத்தில்தான் சில கறையான் பூச்சிகள் வில்லின் மீது ஏற ஆரம்பித்தன.

விஷ்ணுவுடைய வில்லின் நாண் வழியாக ஏறத்தொடங்கிய கறையான்கள். மெல்ல மெல்ல ஏறி... விஷ்ணுவின் தாடைப் பகுதியை நெருங்கின. அந்த இடத்தில் மூங்கிலோடு நாண் பிணைக்கப்பட்டிருந்ததல்லவா?...

கறையான்கள் சரசரவென நாணை தின்ன ஆரம்பிக்க... திடீரென நாண் அறுந்தது. இழுத்து வளைத்துக் கட்டப்பட்டிருந்த வில்லின் மூங்கில் படாரென மேல் நோக்கி வேகமாக விசையோடு எழும்ப...

"அஷ்வனஸ் யய்யஸ்ய சிரப்பரதிததாம்

ஆவாப்யேமஸ வஷுட்கார..."

அதாவது அந்த க்ஷணத்திலேயே விஷ்ணுவின் தலை மூங்கில் மேலெழும்பிய வேகத்தில் மேல் நோக்கி பிய்த்து எறியப்பட்டது.

யாகத்தின் உருவே ஆன விஷ்ணுவின் தலை கழுத்திலிருந்து பிய்த்து எடுக்கப்பட்டு மேலே பறந்தது. இதைப் பார்த்தவர்களுக்கு "அய்யோ... அபச்சாரம் ஆகிவிட்

டதே... விஷ்ணுதான் யாகம். யாகம் தான் விஷ்ணு. அப்படிப்பட்ட விஷ்ணுவின் தலையே தனியே போனது என்றால் யாகம் பாதியிலேயே சிதைந்து போய்விடும்..." என்ற கலக்கம், பயம்.

சோமயாகம் மறுபடி எந்த பங்கமும் இல்லாமல் தொடர வேண்டுமென்றால்... விஷ்ணுவின் பிய்ந்த தலை மறுபடி கழுத்தோடு ஒட்ட வைக்கப்பட வேண்டும். அதற்கு வைத்தியம் பார்க்க வேண்டும். யார் வைத்யம் பார்ப்பார்கள்?...

வேதத்தில் வேதகாலத்தில் வைத்தியம் பார்ப்பதெற்கென்று தனியாகவே இருந்தனர். அவர்கள் அஸ்வினி குமாரர்கள் என அழைக்கப்பட்டனர். இவர்கள் அஸ்வினி தேவதைகளாகவும் கருதப்பட்டனர்.

யாகம் நடத்தும் பிராமணர்கள் நேராக அஸ்வினி குமாரர்களிடம் ஓடினர்கள்.

"இதுபோல விஷ்ணுவின் தலை அவருடைய தனுசு அறுந்ததால் மேல் நோக்கி பிச்சுண்டு போயிடுத்து. தயவுசெய்து... உபகாரம் பண்ணணும்" என விண்ணப்பித்தனர்.

அஸ்வினி குமாரர்கள் வேத டாக்டர்கள். நூற்றுக் கணக்கான வைத்ய முறைகளையும்... இப்போது சொல்கிறோமே "ஆபரேஷன்' அதுபோன்ற பல வைத்ய சாஸ்த்ரம் அறிந்தவர்கள். அப்பேர்ப்பட்ட வைத்தியர்கள் ஃபீஸ் வாங்காமல் இருந்து விடுவார்களா என்ன?...

"சரி... நாங்கள் தைல வைத்ய சாஸ்திரப்படி விஷ்ணுவின் தலையை ஒட்ட வைக்கிறோம். யாகத்துக்கு மறுபடி எந்தத் தடங்கலும் வராம பாத்துக்கறோம்.

ஆனா... இதுக்குப் பிரதியுபகாரமாய்... யாகத்துல எங்க ளையும் சேத்துண்டு சோம ரஸத்துல கொஞ்சம் எங் களுக்கும் தரணும். இதுக்கு நீங்க ஒத்துண்டா... நாங்க ஆபரேஷனை ஆரம்பிக்கிறோம்..."

என நிபந்தனை விதித்தார்கள் வைத்யம் பார்க்கும் அஸ்வினி குமாரர்கள். அவர்களுக்கும் சோம ரஸம் மீது அவ்வளவு ஆசை.

வேறு வழி இல்லாமல்... "சரி... சோமயாகத்தில் அஸ் வினி தேவதைகளுக்கும் ஒரு பங்கு தருகிறோம்..." என உறுதி கொடுக்கப்பட்ட பிறகுதான்... விஷ்ணுவின் தலையை தைலம் தடவி கழுத்தோடு ஒட்ட வைத்தார்க ளாம் அஸ்வினி குமாரர்கள்.

சரி... இந்தக் கதையை நான் எதற்கு சொன்னேன் என் றால்...

"தஞ்மாது ப்ராமணேன பேடஜம்
நகார்யம்..."

வைத்யம் என்பது ரத்தம் பார்க்கும் ஒரு தத்வம். அதா வது மனுஷனை வெட்டி அருவருப்பான இடத்தில் கைவைத்து இந்த வைத்யத்தை மேற்கொள்ள வேண் டும். இதையெல்லாம் பிராமணர்கள் செய்யக்கூடாது. பிராமணனாய் பிறந்தவன் வைத்ய சாஸ்திரமே கற்கக் கூடாது...

என்பது வேத நிபந்தனை. இதனால்தான் அஸ்வினிகு மாரர்களிடம் பிராமணர்கள் ஓடினார்கள். இன்றும்கூட வங்காள மாநிலத்தில் மருத்துவர்களை அஸ்வினிகு மார்... என்றே அழைக்கிறார்கள்.

ஆக... பிராமணன் டாக்டருக்குப் படிக்கக்கூடாது என் பதையும் வேதம் முன்மொழிந்து வழிமொழிகிறது. ஆனால் இன்று அப்படியா நடக்கிறது?...

சோமயாகம் தொடர்பான வேதக்கதையில் பிராமணன் வைத்யம் பார்க்கக்கூடாது என்றதொரு... செய்தியைப் பார்த்தோம்.

சரி... சோமயாகத்தின் மூன்றாவது நாளில் சோமக்கொ டியை தண்ணீர் விட்டு வளர்ப்பது பற்றி பார்த்தோம் இல் லையா?... இந்நேரம் வளர்ந்திருக்கும்.

இப்போது நான்காம் நாளுக்கு வருவோம். நான்காம் நாள், யாகத்தின் முக்கியமான நாள். சோமரஸம் தயா ரித்து முடித்தாயிற்று.



சோமரஸம் எப்படி இருக்குமென்று சின்ன உதாரணம் சொல்கிறேன். நம்மூர்களில் காபிக்கு டிக்காஷன் போடு வார்கள் அல்லவா?... அந்த டிக்காஷன் போலதான் இருக்குமாம் சோமரஸம். தளதளவென வளர்ந்திருக் கும் சோமக்கொடியைச் சுத்தமான ஜலத்தில் நன்றாகக் கழுவி... ஒரு பெரிய கல்லின் மீது வைப்பார்கள். சிறு சிறு கற்களை எடுத்து அக்கொடியை நசுக்கி நசுக்கிக்

கொண்டே இருந்தால்... சோமக்கொடி தன்னை அழித் துக் கொண்டு சோமரஸத்தைக் கொடுக்கும். மிகக் குறைந்த அளவில்தான் இருக்கும் இந்த சாறு.

இதை அப்படியே யாகசாலையில் இதற்காகவே காத்தி ருக்கும் "சம சம' வில் வைப்பார்கள். அதென்ன சம சம...? வேறொன்றும் இல்லை... நம்ம அகல்தான், விளக்கேற் றுவோம் இல்லையா?...

அதுபோன்ற அகலில் சோமரஸத்தை ஊற்றி வைப்பார் கள். அகலில் ஊற்றி வைப்பதாக இருந்தால் அதன் அளவு எவ்வளவு இருக்கும் என்பதை நீங்களே யூகித் துக்கொள்ளுங்கள்.

காபிக்கு நாம் டிக்காஷன் போடுவோம் இல்லையா?... அதே போல அடர்த்தியான திரவமான சோமரஸத்தை "தேவ டிகாஷன்' என்று நமது லௌகீக பாஷையிலே சொல்லலாம்.

சரி... அகலில் ஊற்றப்பட்டு சோமரஸம் வைக்கப்பட்டி ருக்கிறது. யாக சாலை தீப்பற்றி எரிகிறது.

அக்னிதேவன் தன் வெப்பக்கைகளால் சுற்றுப்புறத்தை வெளிச்சமாகவும், சூடாகவும் பரிபாலிக்கிறான். சோம யாகத்தில் 4-வது நாளில் முக்யமான விஷயம் இப் போதுதான். சென்ற அத்யாயங்களிலே ஒரு மேற்கோள் சொன்னேன். "சோமயாகத்தை உரித்துக் காட்டப்போ கிறேன்' என்று அதை இப்போது ஞாபகத்துக்குக் கொண்டு வாருங்கள்.

சோமயாகம் ஜோராராக நடந்து கொண்டிருக்கிறது. யாகம் நடத்தும் பிராமணர் இந்தப் பக்கம் திரும்பி... "தம்பி... எங் கேப்பா போனான் ஸமிதா?... அவனை வரச் சொல்...

காரியம் முடிந்துவிட்டதா பார்..." என சத்தம் போடுகிறார்.

யார் இந்த ஸமிதா?...

யாகம் நடத்தும் இடத்துக்கு மிக பக்கத்தில் ஆண் மாடு. அதாவது காளை மாட்டைக் கட்டிப் போட்டு வைத்திருக்கிறான். ஒன்றல்ல... ரெண்டல்ல நிறைய காளைமாடுகள்.

ஸமிதா கூரிய கத்தியைத் தீட்டிக்கொண்டிருக்கிறான்.

என்ன ஸமிதா தயாரா?... என யாக சாலையிலிருந்து கேள்வி வர... தலையாட்டிக் கொண்டே மாட்டை ஒரே வெட்டு. கழுத்து துண்டாகி ரத்தம் கொட்டுகிறது. உயிர்க்கூக்குரல் போட்டு கதறியடங்குகிறது மாடு.

அதன் கழுத்திலிருந்து தோலை அப்படியே ஸமிதா உரிக்க... மேல் தோல் முழுதும் உரிக்கப்பட்டு... மொழு மொழுவென இறைச்சிப் பிரதேசமாய் கிடக்கிறது மாடு.

மறுபடியும் அந்தக் கூரிய ஆயுதத்தால் வெட்டி... மேல் தோல் தாண்டி உள்ளே இருந்த தோலையும் ஸமிதா உரிக்கிறான்.

மறுபடி... மறுபடி... தோல் அடுக்குகள் சிலவற்றை உரித்த பின் உள்ளே இருக்கிறது "வபா...'. "வபா...' என்றால்...?

'வபா' என்றால் உள்சவ்வு. மெல்லிய சவ்வு. அதுதான் மாட்டின் உறுப்புகளில் சோமயாகத்துக்குப் பிடித்தது. இதுபற்றி விஞ்ஞான விளக்கமே சொல்கிறேன் காத்திருங்கள். மற்ற உடல் உறுப்புகள் சமையலுக்குப் போக இந்த உள்சவ்வை மட்டும் அழகாக சுருட்டி யாகம் நடக்கும் இடத்துக்குக் கொண்டு போய் வைக்கிறார்கள்.

மாட்டின் உள்சவ்வை எடுத்து அக்னியில் போட்டு பண் ணப்படுவதுதான் சோமயாகத்தின் 4-வது நாள்.

பசுக்களைக் கொன்று குவித்து அதன் வபாவை மட் டும் எடுத்து யாகம் முடித்த அன்று 4-வது நாள் இரவு யாரும் தூங்கக் கூடாது. ஏனென்றால் இன்றுதான் சோம ரஸம் தயார் பண்ணியிருக்கிறோம். அது யோக குண்டத் தின் பக்கத்திலேயே வைக்கப்பட்டிருக்கிறது. பத்திரமா கப் பாதுகாக்கவேண்டும் அல்லவா?... அதனால் யாரும் தூங்கக்கூடாது.

அதற்காக...?

"வீணா தோனவேணு யேதாமிராது
ஜாக நேந்தி..."

ராத்திரியில தூக்கம் வராமல் இருக்க என்ன செய்ய வேண்டும்.

வீணையை எடுத்து மீட்டு... வேணு அதாவது புல்லாங் குழலை எடுத்து வாசி. ஆடு... பாடு... சந்தோஷமாக இரு. வீணை என்றால் இப்போதுள்ள வீணையின் முழு வடி வமாக இருந்திருக்க முடியாது. ஆரம்பகட்ட வடிவமாக இருந்திருக்கலாம்.

வீணை, புல்லாங்குழல் இந்த வாத்யங்களோடு டமாரங் கள் அடித்து இரவு முழுதும் ஆடி... தூங்காது விழித்து சோமரஸத்தைக் காப்பாற்ற வேண்டும். இரவு முழுதும் சங்கீத இரவு. இதில் ஒரு முக்கியமான விஷயம்... கண வனும்-மனைவியும் சேர்ந்துதானே சோமயாகம் பண்ண வேண்டும் என்று சொன்னேன். இந்த ஆடல், பாடல் கச்சேரியில் தம்பதியர் இருவரும் சேர்ந்து பங்கேற்கக் கூடாது; ஒருவரை ஒருவர் தீண்டக்கூடாது.

இப்படியாக 4-வது இரவு முடிந்து 5-வது நாளின் விடியல் வானத்தை முத்தமிடுகிறது. கண் விழித்துக் காப்பாற்றிய சோமரஸம் அகலிலிருந்து மெல்ல மெல்ல... அக்னியில் அல்ல அக்னியின் பக்கத்தில் சொட்டு சொட்டாய் உத்ருணி உத்ருணியாய்... (உத்ருணி என்றால் ஸ்பூன் என்று சொல்கிறோமே... அதுபோல குழிபோன்ற தலை கொண்ட சிறு கரண்டி) சோமரஸத்தைச் சேர்க்கவேண்டும்.

இதுதான் தேவதைகளின் தேவை.

"தேஹிமே ததாமிதே..."

இதுதான் யாகத்தின் முதுகெலும்பு மந்த்ரம். முதுகெலும்பையும் ஒடித்து யாகத்தில் போடுவார்களா எனக் கேட்காதீர்கள். முக்கியமானது என்பதற்காகச் சொன்னேன்.

அந்த ஒருவரியின் அர்த்தம்...

"ஹே... தேவதைகளே... உங்களுக்குத் தேவையான சோமரஸத்தை நான் கொடுக்கிறேன். எங்களுக்குத் தேவையான அனைத்தையும் நீங்கள் கொடுங்கள்" - இதுதான் யாக தத்துவம்.



அதாவது தேவதைகளுக்கும் மனிதர்களுக்கும் நடப்பது கொடுக்கல்- வாங்கல். இங்கே பக்தி என்பது mutual exchange market அதாவது பக்திச் சந்தையாகி விட்டது.

சரி... தேவதைகள் வந்தார்கள். சோமரஸத்தைக் குடித் துவிட்டனர். யாகத்தின் முக்கிய நிகழ்ச்சி நடந்து முடிந் தது.

"யக்ஞ யக்ஞுஞ்ச்ச
யக்ஞ பதிங் ஞுச்ச..."

இதுதான் சோமயாகத்தின் ஆகக் கடைசியான மந்த்ரம். இதற்கு சூக்தம் என்று பெயர்.

அப்படியென்றால் good-bye to Dhevathi... இதுவரை யாகம் நடத்த அனைத்து ஒத்துழைப்பும் கொடுத்தீர்கள். 16 பேர் சேர்ந்து பண்ணி வைத்த இந்த யாகம் மூலம் பதி னாறும் பெற்று இந்த லோகம் சுபவாழ்வு வாழ வேண்டும்.

இங்கு வந்ததற்கு நன்றி. சோமரஸம் சாப்ட்டீர்கள். அந்த சுவையோடு புறப்படுங்கள். நாங்கள் செய்த காரியம் நற் காரியம்தான்.

தேவதைகள் புறப்பட்டு விட்டன. 5-ஆம் நாள் மாலை... யாகம் முடிந்து விட்டதா... இன்னும் ஒரே ஒரு சம்பாவிதம் நடந்தால் யாகம் முற்றிலுமாக முடியும்.

தம்பதிகள்தானே யாகம் நடத்தியவர்கள். பாவம் 5 நாள் பிரிந்தே இருந்தார்களே...

சோம யாகம் பற்றி பல சூடான செய்திகளைப் பார்த்த பிறகு... இப்போது ஒப்பற்ற ஒரு சுவாரஸ்யச்சுவை பொருந்திய நிகழ்வை தரிசிக்கலாமா?...

அதாவது முத்தம் என்பது இன்றைய உலகில் நெருங்கிய ப்ரியமானவர்கள் தங்கள் வாழ்த்துக்களைப் பரிமாறிக்கொள்ளும் ஒரு வழியாக இருக்கிறது. உதட்டைத் திறந்து வாழ்த்துக்களை உச்சரித்தால் அது காற்று வழியே போய் சென்று சேர வேண்டியவரின் காதை அடைகிறது. இது சாதாரண வாழ்த்து.

ஆனால்... உதட்டை நமது ப்ரியமானவரின் உதட்டிலேயே வைத்து சொல்லும். வாழ்த்து அதைவிட வலிமைமிக்கது. இதைத்தான் முத்தம் என அழைக்கிறோம்.

தாய் மழலைக்குக் கொடுக்கும் முத்தம், அம்மழலை சற்றே வளர்ந்ததும் கேட்ட போதெல்லாம் தாய்க்குக் கொடுக்கும் முத்தம். மகிழ்வில் உள்ளங்கைகளில் வழங்கும் முத்தம். ஆசிரியர் தன் மாணாக்கனை உச்சி முகர்ந்து கொடுக்கும் முத்தம். வெற்றிக் கோப்பையின் மீது விளையாட்டு வீரர்கள் வைக்கும் வேர்வை முத்தம்.

இவை எல்லாவற்றுக்கும் சற்றும் குறையாத சுவாரஸ்யமானது இதழோடு இதழ் வைத்து அழுத்தும் நாயக-நாயகி முத்தம் அல்லவா?...

பொதுவாகவே இந்த முத்தத்தை "ஃபிரெஞ்ச் முத்தம்' என அழைக்கின்றார்கள். ஏன்?... மற்ற தேசங்களிலெல்லாம் இதுபோல் யாருக்கும் முத்தம் கொடுக்கத் தெரியாதா?...

அதுவல்ல... பிரெஞ்ச் தேசத்தில் கணவனோ, மனைவியோ இருவருமே வெளியில் போய் மது அருந்திவிட்டு வீட்டுக்கு வருவது இயல்பாம். இப்படிப்பட்ட நேரத்தில்... வீட்டுக்கு வரும் கணவன் மது அருந்தியிருக்கிறானா என சோதனை செய்வதற்காக அவனது உதட்டோடு மனைவி தன் உதட்டை வைத்து உறிஞ்சிப் பார்ப்பாள்.

அதுபோல வெளியில் சென்று வந்த மனைவி மதுர சம் உட்கொண்டிருக்கிறாளா என்பதை தன் உதடுகள் மூலம் சோதனை செய்வான் கணவன்.

இது ஒரு பழக்கமாகிப் போய்... அதன்பிறகு தான் உதடுகளின் உண்மையான சுவையை கண்டுபிடித் துள்ளார்கள். அதுமுதல், உதட்டோடு உதடு வைத்து முத்தம் கொடுப்பது வழக்கமாகி விட்டது. உலகமெல் லாம் இப்பழக்கம் இருந்தாலும் இதை படுக்கையறை தாண்டி வெளியே... ஃப்ரெஞ்ச் தேசம் எடுத்து வந்ததால் "ப்ரெஞ்ச் முத்தம்' என்கிறார்கள்.

அந்த LOGIC படி பார்த்தால் இந்த முத்தத்தை 'FRENCH KISS' என்று நீங்கள் அழைக்கக் கூடாது. இதற்கு முன்பே வேதத்தில் இதுபோல் ஒரு முத்தக் காட்சியை நான் உங் களுக்கு தருவித்துக் காட்டுகிறேன்.

அபாலை... இவள் மிக அழகான பெண். அத்திரி கோத் ரத்தில் பிறந்தவள். மிக அழகானவள் + அறிவானவள். அவருடைய தகப்பன் அவளை தக்க நேரத்தில் தக்க ஆண் மகனுக்குக் கன்னிகாதானம் செய்து கொடுத் தான்.

நன்றாகத்தான் நடந்து வந்தது அவளது இல்ல றம். திடீரென அபாலைக்கு உடல் நலம் சரியில்லாமல் போய்விட்டது. என்னவென புரியவில்லை. ஏதென புரிய வில்லை. ஆனால் அபாலையை உடல் ரோகம் வாட்டி யது.

தன்னால் கணவனுக்கு ஏதும் பணிவிடைகள் செய்ய முடியவில்லையே... திருப்திப்படுத்த முடியவில்லையே... -என்ற ஆதங்கத்தில் அழுகையோடு புறப்பட்டு தன் அப் பன் வீட்டுக்கே வந்துவிட்டாள் அபாலை. அப்பன் வீட்

டுக்கு வந்த பிறகும் அவளுக்கு தன் உடம்பில் உள்ள வியாதியைப் பற்றி கவலையில்லை. ஏனென்றால் அத்திரி கோத்ரத்துப் பெண்கள் தெய்வீக உணர்ச்சியோடு வாழ்ந்து வருபவர்கள். இக்கோத்ரத்தில் பிறந்த பல பெண்கள் வேத மந்த்ரங்களையே இயற்றியிருக்கிறார்கள்.



அந்த வகையில்... தெய்வத்தைப் பற்றி சிந்தித்தபடியே இருந்தாள் அபாலை. ஒருநாள் வீட்டிற்கு தண்ணீர் எடுப்பதற்காக பக்கத்தில் ஓடும் நதிக்கு போனாள் அபாலை.

இவள் போன்று தண்ணீர் எடுக்கப் பெண்கலெல்லாம் போவார்கள்... நதிக்கரையில் நின்று தண்ணீர் எடுத்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பி விடுவார்கள். என்ன ஆச்சரியம்?...

அபாலைதான் வித்யாசமான பெண் ஆயிற்றே. அவள் கண்ணில் தென்பட்டது சோமக் கொடி. ஆனால் அது சோமக் கொடி என்றோ... இந்தக் கொடியிலிருந்து வரும் ரஸத்திற்காகவே பலப்பல யாகங்கள்... அதற்காகவே இந்திரன் முதலானவர்கள் காத்திருக்கிறார்கள்

என்பதையெல்லாம் அந்த நொடியிலே அபாலை அறிய வில்லை.

வேடிக்கையாக சிரித்தபடியே... அந்த சோமக்கொடியை பிடுங்கி வாயில் வைத்து கடிக்க ஆரம்பித்தாள். அவ ளுடைய மெல்லிய இதழ்கள் வழியே வாய்க்குள் ஊடு ருவி... அவளது பற்களால் சுகமாக கடிபட்ட சோமக் கொடி மெல்ல மெல்ல சோம ரஸத்தை கொட்டியது.

ருசியாக வேறு இருந்ததால் "சப்பு' கொட்ட ஆரம்பித் தாள் அபாலை.

வந்தது என்ன சாதாரண ரஸமா?... சோம ரஸமா யிற்றே... இந்திரன் சர்வக்ஞன் உலகத்தில் எங்கே சோம ரஸம் பிழியப்பட்டாலும் இந்திரனின் மூக்கு வேர்த்துவி டும்.

அபாலை வாயில் சோமரஸம் சொட்டியதும் இந்திரனின் நினைவுக்குள் பொறி தட்டியது உடனே கிளம்பினான். எங்கே?... எங்கே?... காடு, மலையெல்லாம் தேடினான்.

சோமரஸம் சொட்டும் இடத்தை கண்டுபிடித்து வந்து இறங்கினால்... அங்கே அபாலை நிற்கிறாள்.

"என்னம்மா... நீ கடித்துக் கொண்டிருக்கிற கொடி என்ன என தெரியுமா?... நான் யார் என தெரியுமா?..."

"எனக்கென்ன?... தெரிந்து என்னாகப் போகிறது?..." - பதில் சொன்னாள் அபாலை.

"அது எனக்குப் பிடித்த சோமரஸம். நான்தான் இந்தி ரன்... சோமரஸத்தை குடிக்க வேண்டும் போல இருக் கிறது. அதை எனக்குக் கொடுத்து விடேன்..." -இந்திரன் கேட்டான்.

அபாலையோ சிரித்தாள்.

"ம்... நன்றாக இருக்கிறதே... நீ இந்திரனா? உனக்கு என் வாயில் இருக்கும் சோமரஸம் வேண்டுமா?... எனக்கு தான் தெரியுமே... வெறும் சோமரஸம் மட்டுமா கொடுப் பார்கள். வீட்டுக்கு வா வறுத்த அரிசியை மாவாக்கி, பொரியையும் சேர்த்து தருகிறேன். ஆனால் ஒன்று! நீ இந்திரன் என்று என்னால் நினைக்க முடியவில் லையே..."

அபாலையின் பதில் கேட்டு இந்திரன் அதிர்ந்தான். ஆனால்... அவளது வாயில் உள்ள சோமரஸத்தை குடிக்க ஆசைப்பட்டான்.

உனக்கு என்ன வேண்டும் என கேள். எல்லாவற்றை யும் தருகிறேன். ஆனால்... அதற்கு பதிலாக சோமரஸம் மட்டும் எனக்கு கொடுத்துவிடு... -இந்திரனின் சோமதா கம் அதிகமானது.

இதைப் பயன்படுத்திக் கொள்ள நினைத்தாள் அபாலை.

"இப்போது கேட்கிறேன். எங்கள் பகுதியில் விளை யாத இடத்திலெல்லாம் பயிர் விளைய வேண்டும். என் தந்தையின் தலை வழுக்கையாக இருக்கிறது. அவரது தலையில் மறுபடி முடிவளர வேண்டும். என் உடலில் உள்ள வியாதிகள் தீர வேண்டும்..."

-இதுதான் அபாலையின் கோரிக்கைகள்.

"ப்பு... இவ்வளவுதானா?...' என்ற இந்திரன் முதல் இரண் டையும் நிறைவேற்றிவிட்டு... மூன்றாவதாக...

அபாலையை தன் கையால் தூக்கினான். தன்னுடைய ரதத்தின் நுகத்தடி துளை, சக்கரம், ரதத்தின் நடுபாகம் ஆகியவற்றின் வழியே அபாலையை நுழைத்து இழுத் தான். அவளது எல்லா வியாதிகளும் தீர்ந்தன.

"இப்போதாவது சோமரஸம் கொடுப்பாயா?..."

"ம்... ஆனால் ஒன்று. நான் பதியினால் கைவிடப்பட் டவள். இப்போது உன்னுடன் சேர ஆசைப்படுகிறேன். என் வாயில் உள்ள சோமரஸத்தை உன் வாயின் மூல மாகவே உறிஞ்சி எடுத்துக்கொள்..."

இந்தக் காட்சிக்காகத்தான் இவ்வளவும் சொல்ல வந் தேன்.

உடனே அபாலையை அப்படியே பிடித்து அவளது இதழ் மீது தன் இதழ்களை அழுந்தப் பதித்து அவளது வாயில் இருந்த சோமரஸத்தை அப்படியே உறிஞ்சுகி றான் பாருங்கள் இந்திரன். சோமரஸத்தோடு அபாலை யின் இதழ்ச்சுவையையும் உமிழ்நீரையும் கூட உறிஞ்சி விட்டான்.

இந்த முத்தக்காட்சியை விடவா ஃப்ரெஞ்ச் முத்தம் பழையது?...

அதனால்... இதை ஃப்ரெஞ்ச் முத்தம் என்பதற்கு பதில் "அபாலை முத்தம்' என அழைப்போம். ஆனால்... நாமோ கணவனால் கைவிடப்பட்ட பெண்களை அபலை என அழைத்து வருகிறோம். நல்லதை எடுக் காமல் கெட்டதை மட்டுமே நாம் எடுத்துக் கொண்டிருப் பதையும் இது எடுத்துக் காட்டுகிறதல்லவா?...

கனியிருக்க ஏன் காயைக் கடிக்கிறீர்கள்?...

மொத்தம் 5 நாள் நடக்கும் சோமயாகத்தின் போது கண வனும் மனைவியும் யாகத்தில் சேரவேண்டுமே தவிர தேகத்தில் சேரக்கூடாது. இது முக்கியமான நிபந்தனை.

இப்படியாக 5 நாள் சுத்தமாய் தனித்திருந்த கணவனும் மனைவியும் 5-ம் நாள் மாலை என்ன செய்ய வேண்டும் என மந்த்ரம் சொல்கிறது?...

"பத்னி எஜமானஸ்ய அந்யோன்ய
ப்ருஷ்ட்யே பிரதாவதாஹா..."

பெருமை பொருந்திய சோமயாகத்தை 5 நாட்களாக வெகு சிரத்தையோடு நடத்திய கணவனே... மனைவியே... யாக சம்பந்தம் கொள்வதற்காக தேக சம்பந்தம் கொள்ளாமல் விரதம் காப்பாற்றி வெற்றியடைந்து விட்டீர்கள். இதோ உங்கள் சோமயாகம் நிறைவேறியது. தேவதைகளுக்கு சோமரஸம் கொடுத்த கணவனே... இனிமேல் நீ உன் மனைவியின் உதட்டில் காமரஸம் அருந்தலாம். அதற்கு முன் நீங்கள் இருவரும் அந்யோன்யமாக குளிக்க வேண்டும்.

எப்படித் தெரியுமா?... அதையும் அந்த மந்த்ரமே சொல்லிக் கொடுக்கிறது.

நீர்நிலை... அது ஆறோ குளமோ... சோமயாகம் நடத்திய கணவன்-மனைவி இருவரும் ஜலத்தில் ஒன்றாக இறங்க வேண்டும். ஜோடியாக இறங்கும் போது தண்ணீர் கூட மகிழ்ச்சியில் எப்படி தத்தளிக்கிறது பாருங்கள்.

மனைவியின் முதுகு... நிலாவை வெட்டி வைத்தது போல ஜொலிக்கிறது. யாகம் நடத்திய அதே கையால் கணவனானவன் தன் மனைவியின் பின்பக்கத்தைத் தடவிக்கொடுக்க வேண்டும். முதுகிலிருந்து ஆரம்பித்து அவன் கை அவளது பின்பக்கத்தில் மேயவேண்டும்.

அவள் என்ன செய்யவேண்டும்... சோமரஸம் தயாரித்த கல் போன்ற தன் கணவனின் முதுகை தன் பூ போன்ற விரல்களால் அவளும் தடவிக் கொடுக்க வேண்டும்.

இப்படியாக ஒருவர் முதுகை ஒருவர் தடவிக்கொடுத்த பின் இருவரும் சேர்ந்து ஜலக்கிரீடை செய்ய வேண்டும்.

அதுவும் எல்லாரும் பார்த்துக் கொண்டிருக்க... சுற்றி எல்லாரும் நிற்கும்போதுதான் இந்த பின்புறம் தடவும் சடங்கு நடக்க வேண்டும்.

இதோடு சோமயாகம் முடிந்தது.

ஆரம்பிக்கும் போதே சொன்னேன். இது மகா பெரிய சடங்கு... ஆனால் நமக்கு அந்யோன்யமானதல்ல. இன்றும் உலக நன்மைக்கு என்றும், மழை பொழிய வேண்டும் என்றும் கோரிக்கைகளை வைத்து இந்தியாவின், பல இடங்களில் தமிழ்நாட்டின் சில இடங்களில் இன்னும் சோமயாகம் நடந்து கொண்டிருக்கிறது. இந்த யாகம்தான் மற்ற எல்லா யாகங்களுக்கும் ரோல்மாடல்.

வேதம் சொன்ன சோமயாகமும்... இன்றும் நடக்கும் சோமயாகமும் ஒன்றாக நடக்கிறதா?... நானே சில சோமயாகங்களை நடத்தி வைத்தவன் என்ற முறையில்... ஒப்பிட்டுப் பார்க்கிறேன்.

பசுக்களை உரித்து அதன் உள்சவ்வை எரிக்கும் முறை இன்று இல்லை. ஆனால் அதற்கான மந்த்ரம் மட்டும் தாராளமாக ஓதப்படுகிறது. பசுவுக்கு பதில் என்ன செய்கிறார்கள் தெரியுமா?... மாவு உருண்டையை உருட்டி அதைத் தூக்கிப் போடுகிறார்கள். மாடு என்பதை காலத்தின் மாற்றத்தால் மாவு ஆக்கிவிட்டார்கள்.

இன்னொரு முக்கியமான அம்சம் சோமக்கொடியைப் பற்றி பார்த்தோம். அல்லவா?

இதுதான் சோமயாகத்திற்கு முக்கியமான அம்சம். சோமக்கொடியைத் தேடி இமயமலை போய் எவன் இன்று பறித்து வருகிறான்?...

டேய்... கொல்லையில புளியமரம் இருக்கே... அதை ஓடிடா... ஆமாம்... இப்போது "வலி'யில்லாமல் சோமயா கம் நடத்திட... சோமக்கொடிக்கு பதில் புளியம் இலைக ளைத்தான் பயன்படுத்துகிறார்கள்.

சோமரஸம் கிடைக்கும் என தேவதைகள் ஆசை ஆசையாக வந்து இன்றைய சோம யாகங்களுக்கு வந் தால்...

"அய்யய்யோ... இது என்ன சோமரஸம்... என்ன இப்படி புளிக்கிறது?...' என்று ஓடி விடுவார்கள்...

அந்த அளவுக்கு... ஆகிவிட்டது. ஆனால்... அன்று சொன்ன தட்சணைகள் மட்டும் இன்னும் வாங்கப்படு கின்றன. சோமக்கொடி மட்டும் ஏனோ புளியந்தடியாக மாறிவிட்டது...

ஐந்து நாட்கள் நடக்கும் சோம யாகத்தில்... ஒவ்வொ ருநாளும், இரவும் என்ன நடக்கிறது என்பதை பார்த்து விட்டோம். இதே போல... இன்னொரு யாகம்... வாஜபே யம்.

இந்த யாகத்தைப் பற்றி இன்று பலரும் அறியா மல் இருக்கலாம். ஆனால்... இந்த சொல்லை நம்மில் பலரும் ஆகரித்தோ, எதிர்த்தோ உச்சரித்திருப்போம். ஆமாம். வாஜபேயி வாஜபேயி என்ற பெயரை நாம் உச்ச ரித்திருக்கிறோமே. முன்னாள் பாரதப் பிரதமராக இருந் தவராயிற்றே.

வாஜபேயம் என்னும் யாகம் செய்த வம்சத்தில் வந்த தால் வாஜபேயி என்னும் பட்டப் பெயர் ஒட்டிக் கொண் டது.

வைணவ வட்டாரங்களில்... என்னை அக்னிஹோத்ரி என அழைப்பார்கள். சிலர் இன்னும் சுருக்கமாய் அஹோ... அஹோ... என அழைக்கிறார்கள்.

அதுபோல் அடல் பிகாரி வாஜபேயியை பலரும் சுருக்க மாய் வாஜபேயி என்று அழைக்கிறார்கள்.

சரி... நாம் யாகத்துக்கும் வருவோம்.

வாஜம் என்றால் வளர்ச்சித்தன்மை என்று பொருள். அதாவது ஒரு செடி எப்படி மண்ணுக்குள்ளிருந்து முட்டி முட்டி எட்டிப் பார்த்து முளைவிட்டு... இலை விட்டு பிஞ்சு விட்டு... காய் விட்டு... கனி விட்டு... வளர்கிறதோ அதுபோல இந்த உலகம் பரிபூரணத்தன்மை அடையும் வரை வளர்ச்சி அடைய வேண்டும் என்பதற்காகத் தான். வாஜபேயம் என்ற யாகம்.



இந்த யாகத்தில் யூபாரோஹணம் என்பது முக்கியமா னது. அப்படியென்றால்... யாகம் நடக்கும் இடத்துக்கே போய் பார்த்து விடலாமே...

ஒருபக்கம் அக்னி வளர்த்து வைக்கப்பட்டிருக்கிறது. இன்னொரு பக்கம் 17 அடி உயரத்துக்கு பரண் மாதிரி கட்டப்பட்டிருக்கும். மூங்கிலை வைத்து... ஒரு மூங்கில் உயரத்துக்கு கட்டப்பட்ட பரணுக்கு ஏறிச் செல்ல -

ஏணி போன்ற படிக்கட்டுகளும் அமைக்கப்பட்டிருக்கும்.

கீழே யாகம் நடக்கிறது. சோமயாகத்தில் சோமரஸம் உண்டு. இங்கே அது இல்லை. மற்றபடி அக்னிக்குள் என்னென்ன போடுவார்களோ அதெல்லாம் போட்டே தீரவேண்டும்.

உலகம் வளர்ச்சியடைய வேண்டும் என கேட்கும் வாஜ பேய யாகத்துக்கு... பாவம் அதே உலகில்தான் பசுக் களும் இருக்கின்றன. அவைகளும் வளர வேண்டும் என்ற அறிவு இல்லாமல் போய்விட்டதே.

யாக குண்டத்துக்குப் பக்கத்தில் 17 பசுக்கள் காத்திருக் கின்றன. பாவம்... உலகம் வளர நாம் சாகப் போகிறோம் என தெரியாமல்.

சோமயாகத்தில் நடந்தது போலவே 17 பசுக்களையும் வெட்டி தோலை உரிக்கிறான் ஸமிதா. அதே போல உள்சவ்வு "வபா' உருவி எடுக்கப்படுகிறது. அதை அப்ப டியே அக்னியில் இடுகிறார்கள்.

அடுத்தடுத்து மாட்டின் உறுப்புகளும் யாகத்தில் சேர்க் கப்படுகின்றன.

இன்று வாஜபேயி-யை முக்கியஸ்தராகக் கொண்ட கட் சியினர் "பசுவதை' தடை செய்ய வேண்டும் என ஓங்கிக் குரல் கொடுக்கிறார்கள். ஆனால்... வாஜபேயம் என்னும் யாகமோ 17 பசுக்களின் உள்சவ்வை கேட்கிறது.

இது முடிந்தபின்... யாகம் நடத்துபவன் அந்த படிகளில் ஏறி உயரத்தில் உள்ள பரணை அடைகிறான். அதன் மேல் ஏறி நின்று கொண்டு

"ஜனங்களே... நாம் எல்லாரும் கடவுளின் பிள்ளைகள். நாம் அனைவரும் க்ஷேமமாக வாழத்தான் யாகம் செய்

தோம். "யாயே... சுபரோ ஹாவா...' அந்த பசுக்களெல்லாம் சொர்க்கத்துக்குப் போய் தேவதைகளை திருப்திப்படுத்தும். தேவதைகள் திருப்திப்பட்டால் நாம் திருப்தியாக வாழலாம்" சொல்லிவிட்டு

உயரமான பரணிலிருந்து கீழே இறங்குகிறான். யாகம் முடிந்தது.

வாஜபேய யாகத்தில் பரண்கள் அமைத்து பசுக்கள் பலியிடப்பட்டதைப் பார்த்தோம். பிற்காலத்தில் வாஜபேயம் என்பது ஒரு கொண்டாட்டமாகவும் மாறிப்போய்விட்டது.

இதன் இலக்கு பிராமணனை உயர்த்துவது. அதாவது...

"வயம் ராஷ்ட்ரே ஜனக்யாமா புரோகிதாஹா..."

பிராமணர்கள் இந்த தேசம், ஜனங்கள் நன்றாக இருப்பதற்காக புரோகிதம் பண்ண வேண்டும்.

சரி... அடுத்து நாம் பார்க்கப் போகும் யாகம்... ராஜசூயம்.

இது ராஜாக்களுக்காக ராஜாவே நடத்தும் யாகம். அரசன் அவனது மனைவியர்கள், அவனது அமைச்சர்கள் எல்லார் வீட்டிலேயும் இந்த யாகம் நடத்தப்பட வேண்டும்.



ராஜாவுக்கும், அவனது மனைவிகளுக்கும் அபிஷேகம் செய்வித்து இந்த யாகத்தை நடத்துவார்கள்.

ராஜாக்கள் நடத்தும் யாகங்களில் ராஜசூயத்தை விட அஸ்வமேதத்தில் தான் விஷயம் அதிகம்.

"ஸதே விஷ்வா வசஸ
பதிந்திவஹா யயேகாஹா விபுஹீ...
அதிதீர்ஜினானாம் சபூர்யாஹா நூதன மாவிலாசதீ
தம்வர்த்தினிஹீ அனுவாவ்முதே..."

இந்த மந்த்ரத்தை முன்பே ஏதோ ஓர் இடத்தில் நாம் பார்த்ததாக ஞாபகம்.

அதாவது உலகம் என்பது ஒரு குடையின் கீழ் என்பது தான் இந்த மந்த்ரத்தின் உள்ளீடு. அஸ்வமேதயாகமே வெற்றிக்காகவும், வெற்றியைக் கொண்டாடவும் ராஜாக்கள் செய்வது.

POLICITICAL UNITED/ FOR ALL BENIFITS/ FOR ELEMINATE ALL SINS

...இதற்காகத்தான் அஸ்வமேதம். அதாவது அடுத்தவரின் ராஜ்யத்தையெல்லாம் வென்று நமது ராஜ்யத்தை ஒருங்கிணைக்க வேண்டும். அனைத்து நற்பலன்களை

யும் அடைய வேண்டும். அனைத்து பாவங்களையும் நீக்க வேண்டும். இதற்காகத்தான் அஸ்வமேத யாகம்.

அது எப்படி நடக்கும் என்பதை இந்துமதம் எங்கே போகிறது -1லேயே பார்த்தோம்.

ராஜா ஒரு ஆண் குதிரையை அவிழ்த்து விட்டு அடித்து விரட்டி விடுவார்கள். அக்குதிரை எங்கெங்கு செல்கி றதோ... அதன் பின்னாலேயே இந்த ராஜாவின் காலாட் படை ஆயுதங்களோடு திரண்டு பின் தொடரும்.

குதிரை சென்று நிற்கும்வரை... அந்த ராஜாவின் ஆளு கைக்குட்பட்ட இடமாக அறிவிக்கப்படும். எதிர்த்து எவ னாவது வந்தால் போர். இல்லையென்றால் வெற்றி அறி விப்பு. பின் அக்குதிரையை மையமாக வைத்தே அஸ்வ மேத யாகம். வீரம் கலந்த இந்த யாகத்தில் ஒரு விரசத் தையும் வைத்திருக்கிறார்களே...

ஆமாம். ஓடிக்களைத்து வந்த ஆண் குதிரையோடு... ஒரு பெண் குதிரையை இணை சேர்ப்பார்கள். அப் போது இயற்கை இன ஈர்ப்பு விசையின் உந்துதலால்... ஆண் குதிரையின் உறுப்பு நீண்டு கொண்டு நிற்கும்.

அந்த அஸ்வமேத இரவு... விடிந்தால் மறுநாள் யாகம். முதல்நாள் இரவு முழுதும் எந்த ராஜா இந்த யாகத்தை பண்ணுகிறானோ அவனது மனைவிகளில் ஒருத்தி இந்த குதிரையின் ஆண் உறுப்பை கையில் பிடித்துக் கொண்டு இரவு முழுதும் இருக்க வேண்டும்.

"அஸ்வஸ்ய சத்ர சிஷ்நந்து
பத்னி கிராக்யம் ப்ரசக்ஷதே...'

இந்த மந்த்ரமும் இதைத்தான் சொல்கிறது. இதன்பின் மறுநாள் அந்தக் குதிரை யாகத்தில் போட்டு எரிக்கப்படு கிறது.

ராத்திரி முழுவதும் அதன் உறுப்பைப் பிடித்துக்கொண்டிருந்தாளே ராஜாவின் மனைவி ராணி, அவள்?...

"எங்களுக்கு நீ யாகம் நடத்த தட்சணை கொடுத்தாய்... மரியாதை கொடுத்தாய். ஆனால்... இன்னும் ஒன்று பாக்கியிருக்கிறது. உன் மனைவியான அந்த ராணியை ஓரிரவு எங்களுக்குத் தரவேண்டும். அப்போது தான் யாகம் நிறைவடையும்..." என யாகம் நடத்துபவர்கள் கேட்கிறார்கள்.

அதன்படியே... முதல்நாள் இரவு குதிரையின் உறுப்பை பிடித்துக் கொண்டிருந்தவள்... மறுநாள் இரவு யாகம் நடத்திய பிராமணர்களுடன் இருக்கிறாள். இதுதான் அஸ்வமேத யாகம்.

சோமயாகம், வாஜபேய யாகம், ராஜசூய யாகம், அஸ்வமேத யாகம் எல்லாம் பார்த்தாயிற்று... இன்னும் ஒரு முக்கியமானது...

"வயம் ராஷ்ட்ரம் ஜனக்யாமா புரோகிதாஹா..." -தேசமும், ஜனங்களும் நன்றாக இருக்க வேண்டும். சுபிட்சமாக சிறக்க வேண்டும். அதற்குப் பிழையின்றி மழை பெய்ய வேண்டும்... குழந்தைகள், பசுக்கள், பொருளாதாரம் எல்லாம் பெருக வேண்டும்.

இதுதான் இதுவரை நாம் பார்த்த யாகங்களின் வரலாறு. அதற்காக பசுக்களையே பலியிட்டதும் வரலாறுதான்.

ஆனால்... இந்த யாகங்களையெல்லாம் கடந்த யாகம்... மிக அதிபயங்கரமான யாகம்... ப்ரதியங்கரா யாகம். இதற்கு இன்னொரு பெயர் சத்ரு சம்ஹார யாகம்.



அதாவது உனக்கு யாராவது எதிரிகள் இருந்தால் அவர் களை அழிப்பதற்கு தேவதைகளை நீ ஏவி விடமுடியும் என கெட்டவழி காட்டுவதுதான் இந்த யாகம்.

கும்பகோணத்தின் மிகப் பக்கத்தில் உள்ள கிராமம் அய்யாவாடி. உப்பிலியப்பன் கோயிலிலிருந்து நாச்சியார் கோயில் செல்லும் வழியிலுள்ளது அய்யாவாடி. இங்கே தான் அந்த பிரத்தியங்கரா தேவி கோயில். இந்த ஊர் தான் மந்த்ர பயங்கரவாதத்திற்கு இப்போது பிரபல்ய மாகி வருகிறது. இங்குதான் அமாவாசை-பௌர்ணமி யின் நள்ளிரவுகளில் யாகம் நடக்கும். எப்படி... மூட்டை முட்டையாய் காய்ந்த மிளகாயை அள்ளி தீயில் கொட் டுவார்கள். எதற்கு... 'இந்த மிளகாய் எப்படி நெருப்பில் பொசுங்கி எரிகிறதோ... அதே போல எனது எதிரிகள் பொசுங்கிச் சாகவேண்டும்' என்பதுதான் இந்த யாகத் தின் அடிப்படை.

அதென்ன ப்ரதியங்கரா தேவதை. யார் அவள்?...

வேதகாலத்தில் ஆங்கிரசர் என்னும் ரிஷி இருந்தார். இவரது வேதமந்த்ரங்களுக்கு பிரதிகளாக பின் வந்தவர் கள் பிரதி ஆங்கிரஸர்கள். அதாவது பிரதியாங்கிரஸா. இது பின் மருவி... பிருதியாங்கிரா என ஆனது.

அதாவது ஆங்கிரஸரின் மந்த்ர சாஸ்திரங்களை பின்பற்றிய அவரது பிரதிநிதிகள்தான் இவர்கள்.

ஆனால்... பின்னாளில்... பிரத்யங்கரா தேவி என்னும் ஒரு பெண் தேவதையையும் கொண்டு வந்து அதை துர் தேவதையாக்கி... தங்களது காழ்ப்புணர்ச்சிக்காக கடவுளை பயன்படுத்தி விட்டனர்.

என்ன கதை தெரியுமா?...

பெருமாள் நரசிம்ம அவதாரம் அதாவது மனித உடல் சிங்க முகம் கொண்டு... இரண்யனை அழித்தார் ஞாபகம் இருக்கிறதா?...

இரண்யனை கிழித்து எறிந்து கொன்ற பிறகும் நரசிம்மருக்கு கோபம்... வெறி தணியவில்லையாம். அப்போது பிரம்மன் சிவனிடம்... "நீதான் எப்போதும் இப்படி கோபமாக இருப்பாய். இன்று பெருமாளே இப்படி இருக்காரே ஏதாவது பண்ணு...' என வேண்டுகோள் வைத்தாராம்.

அப்போது சிவன் ஒரு பறவை உருக்கொண்டார் என்பது பின்னர் அவர்களாலும், தேவி உபாசகர்களாலும் நெய்யப்பட்ட கட்டுக்கதை.

இதில் சிவன் பறவை வேஷம் எடுத்தாரே. அந்த பறவையின் பெயர் சரபம். இது எப்படி இருக்குமென்றால்... இரண்டு சிங்க முகங்கள். இரண்டு இறக்கைகள். எப்படி இருக்கும் என்றால்... கொடிய தகடுகள் போன்ற கூரிய இறக்கைகள். இது மட்டுமல்ல... எட்டு கால்கள்.

இதுதான் பட்சிகளுக்கெல்லாம் ராஜபக்ஷி. இந்த கொடிய பட்சியின் இரண்டு இறக்கைகள் சொன்னேன் அல்லவா?...

அதில் ஒன்று பிரத்யங்கராதேவி இன்னொன்று துர்கை. இது காஞ்சி மகாத்மியம் என்ற காஞ்சி புராணத்தில் வரு கிறது. எப்படி அந்த சரப பட்சிக்கு இரண்டு இறக்கை களோ... அதுபோல் இந்த நூலுக்கும் இரண்டு காண்டங் கள்.

முதல் காண்டம் சிவஞான முனிவராலும்... இரண்டாவது காண்டம் சிவஞான முனிவரின் மாணாக்கர் கச்சியப்ப முனிவராலும் இயற்றப்பட்டது.

அந்த பட்சிதான் நரசிம்ம மூர்த்தியின் கோபத்தை தணித்ததாம். சரபத்தின் ஒரு இறக்கையாக கூறப்பட்ட ப்ரத்யங்கரா தேவிக்குதான்... இந்த யாகம்.

இப்படிப்பட்ட கொடுமையான யாகம் நடத்த சிலர் இன் னும் அய்யாவாடிக்குப் போய்க் கொண்டுதான் இருக்கி றார்கள்...

சத்ரு சம்ஹார யாகம் பற்றி பார்த்து வருகிறோம். சரபம் என்னும் ராஜபக்ஷிக்கு ஒரு இறக்கை துர்க்கை. இன் னொரு இறக்கை பிரத்யங்கரா என்பதை கதையில் கண்டோம்.

இந்தக் கதை கட்டுக்கதை என்பதை வேதத்திலிருந்தே ஆதாரத்தை எடுத்து வைக்க ஆசைப்படுகிறேன்.

"ஜாதவேது தனபாம் சோமம்
அராதீ யதஹா நிதஹா திவேதஹா
சனம் பரிஷது அதி துர்காணி விஷ்வா..."

இதற்கு அர்த்தம்...

சோமராஜாவிடம் வேண்டுகிறார்கள். "சோமா... நாங் கள் செய்யும் காரியங்களை நல்லவைகளாக்கு, அக்னி

துணையோடு. நீ புக முடியாத இடம் என்பதே இல்லை. அதனால் எங்களை சுபிட்சமாக்கு..."

இதுதான் அந்த வேத மந்த்ரத்துக்கு அர்த்தம். இருங்கள். மறுபடியும் சற்று மேலே போய் அம்மந்த்ரத்தை வார்த்தை வார்த்தையாய் உச்சரித்து வாருங்கள். மூன்றாவது வரி யில் நான்காவது பதம் என்ன?...

துர்கானி! துர்க்கம் என்றால் புக முடியாத இடம். வேதத் தின் இந்த சொல்லை உருவிதான் துர்காதேவி என்ற தேவதையை வேதகாலத்துக்கு ரொம்ப ரொம்பப் பிறகு உருவாக்கினார்கள். அதனால் துர்கா என்கிற தேவ தையே கிடையாது. இந்த பதத்துக்கு இப்போது... தேவி என்றும் வலிமையான சக்தி என்றும் கற்பிக்கப்பட்டி ருக்கிற அத்தனை அர்த்தங்களும் தப்பு தப்பு. தப்போ தப்பு. வேதத்திலிருந்து இதுபோல் உருவப்பட்ட எத்த னையோ சொற்கள் இப்போது தெய்வங்களாக உரு வாக்கப்பட்டு விட்டனர். காரணம் நமது மடமை.



சரி... துர்க்கையின் அர்த்தத்தை பார்த்தோம். சரபம் என் னும் பட்சியின் ஒரு இறக்கையின் நிலைமை இப்படி

யென்றால் பிரத்யங்கரா என்னும் இன்னொரு இறக்கை யைப் பற்றி நாம் ஏற்கனவே பார்த்தோம்.

ஆங்கிரசர் என்னும் ரிஷியின் பிரதிநிதிகளாக வாழ்ந் தவர்கள் பிரதியாங்கிரஸர்கள். காலமாற்றத்தில் இந்த பதத்தை ப்ரத்யங்கிரா எனும் தேவதையாக்கி தூர்காரி யங்களுக்கு பயன்படுத்துகிறார்கள்.

எனக்கொரு வாசக நண்பர் மெயில் மூலம் மெஸேஜ் கொடுத்து ஒரு கேள்வி கேட்டிருக்கிறார்.

"எதிரிகளை அழிப்பதற்காக கும்பகோணம் பக்கத்தி லுள்ள அய்யாவாடி கோயிலில் தமிழகத்தின் அரசியல் தலைவர்களில் ஒருவரான ஜெயலலிதா சத்ரு சம்ஹார யாகம் நடத்தினார் என செய்திகளில் படித்தேன்.

அதே போல் காஞ்சி சங்கராச்சாரியார்களும் சத்ரு சம் ஹார யாகம் நடத்தினாராமே...?" என என்னிடம் கேள்வி கேட்ட அந்த நண்பரின் பெயர் சேது கோயமுத்தூர் ஜில் லாவிலிருந்து எனக்கு 'நக்கீரன்' மூலம் மெயில் அனுப்பி யிருக்கிறார்.

அவருக்கு மட்டுமல்ல... அனைவருக்கும் நான் இது பற்றி சொல்லக் கூடிய பதில். ப்ரத்யங்கிரா யாகம் என் பது ஏமாற்றுவேலை. லோக க்ஷேமத்துக்கு (நன்மைக்கு) என செய்து விட்டுப் போனாலும் பரவாயில்லை.

ஆனால்... மந்த்ர சாஸ்திரம் என்ற பெயரில்...

"ஓம் த்ரீம் ட்ரீம் ப்ரிம் க்ரிம்
ஹம்புட்... ஹம்புட்..."

என அழுத்தமான கரடுமுரடான உச்சரிப்புகளைக் கொண்ட மந்த்ரங்களை உச்சரித்து நள்ளிரவுகளில் ப்ரத்யங்கரா தேவிக்கு யாகம் நடத்துகிறார்கள். இந்த

வயிற்றெரிச்சல் போதாதென்று மிளகாயையும் கொட்டு கிறார்கள். "ஹம்புட்' என்றால் அழி... போட்டுத்தாக்கு... சொல்லு... என துஷ்ட அர்த்தங்கள்தான்.

அந்த ப்ரத்யங்கிரா தேவி என்ன நாம் சொன்னால் செய் யும் கூலிப்படைத்தலைவியா?...

இப்படிப்பட்ட யாகம் நடத்தவேண்டும் என்ற எண்ணமே கெட்ட எண்ணம். அதாவது பகிரங்கமாக நடத்தப்படும் கொலைமுயற்சி.

சத்ரு சம்ஹார யாகத்தை ஒருத்தர் நடத்தினார் என ஆதாரத்தோடு தெரியவந்தால்... இப்போதைய நமது தேச அரசியல் சட்டப்படி... அவர்கள் மீது கொலைமு யற்சி 307 சூட் (வழக்கு) போடலாம். குற்றவாளிக் கூண் டில் நிறுத்தலாம்...

ஒவ்வொரு யாகமாகப் பார்த்தோம். அவற்றில் என் னென்ன பலியிடப்படுகிறது என்றும் பார்த்தோம். இதில் இன்னும் சில செய்திகளை உங்களுடன் பகிர்ந்து கொள்ளலாம் என இப்போது முடிவுக்கு வந்தேன்.

ஏனெனில் யாகம் எப்படி நடக்கும் என்பதைச் சொன்ன நான்... இன்னும் அப்படியே துல்லியமாக அந்த யாகக் காட்சிகளை படம்பிடித்துக் காட்டலாம் என நினைத் தேன்.

அந்தக் காலத்தில் ஆடு, மாடு இவைகளின் மாமிசங்கள் அதிகமாக உண்ணப்பட்டு வந்ததால்... யாகத்தில் அந் தப் பிராணிகளின் மாமிசத்தை ஹோமத்தில் சேர்ப்பது வழக்கமாக இருந்தது.

இதில் ஆடு என்று வந்து விட்டாலும் பெரும்பாலும் ஆண் ஆடு அதாவது இப்போது நாம் கிடா என்று அழைக்கிறோமே... அதுதான் யாகத்தின் பிடித்த பலி.

யாக பீடம் எப்படிக் கட்டப்படும் தெரியுமோ?... செங்கற்களால் கட்டப்படும் அக்னி சயனம் எனப்படுகிற யாகபீடம் வலிமையாகவும், உறுதியாகவும் இருக்கவேண்டும் என்பது அக்கால யாகக் க்ரமங்களில் இருந்து தெளிவாகத் தெரிய வருகிறது. யாக பீடம் உறுதியாக இருக்கவேண்டும் என்பதற்காக என்ன செய்தார்கள்?

பலி கொடுக்கப்படுகின்றன அல்லவா... குதிரை, செம்மறி ஆடு, வெள்ளாடு, காளை ஆகியவை. இவைகளின் தலைகள் யாக பீடத்தின் அடிபாகத்தில் கயிறில் கட்டித் தொங்கவிடப்படுகின்றன.

யாகம் நடக்கும் இடம் எப்படி இருக்கின்றது என்பதை வேதத்தின் வார்த்தைகளில் சொல்வதென்றால்...

"புரோகிதர்கள் அங்கும் இங்கும் பரபரப்பாக நடந்து கொண்டிருக்க... யாகத்தை நடத்தும் எஜமானன் உபவாசத்தால் மெலிந்து போய் ஓரிடத்தில் அமர்ந்திருக்கிறான்" என்கிறது வேதம்.

அப்படியென்றால் யாகத்தை நிறைய பேர் நடத்துவார்களோ? நான் ஏற்கனவே... சோம யாகத்தை 16 பேர் சேர்ந்து நடத்துவார்கள் என சொல்லியிருக்கிறேனே... ஞாபகம் இருக்கிறதா?



யாகத்தின் புரோகிதர்கள் வகை வகையாக பிரிக்கப் பட்டு அவர்களுக்கு தனித்தனி பெயர்களும் கொடுக்கப் பட்டு... அவர்கள் செய்ய வேண்டிய வேலையும் பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

தலைமை புரோகிதரின் பெயர் ஹோத்ரு. இவர் தான் முறையாக அனைத்தையும் ஆரம்பித்து வைப் பவர். மந்த்ரங்களை சொல்லிக் கொண்டிருப்பதையே வேலையாகக் கொண்ட "ஷகாத்ரு' என்பவர் அடுத்த புரோகிதர். 'அத்வாயு' என்ற புரோகிதர்தான் யாகத்தை செய்பவர். யாக பாத்திரங்களை சுத்தம் செய்வது, சோம ரஸம் பிழிவது ஆகியன இவரது செயல்கள். இவர்களை எல்லாம் மேற்பார்வை செய்யும் இடத்தில் இருப்பவன் 'பிராஹ்மன்' இதுபோல் இன்னும் பல புரோகிதர்கள் யாகசாலையில் இருக்கிறார்கள்.

ரிக் வேதத்தில் "ஹோத்ரு' என்ற புரோகிதரே முக்கியமா னவராக கருதப்படுகிறார்.

இந்த இடத்தில் ஒரு ஒப்பீட்டுத் தகவல் சொல்கிறேன். அதாவது ரிக்வேத புரோகிதர்களின் இப்பெயர்கள் எல் லாம் ஈரானிய கலாச்சாரத்திலும் காணப்படுகிறது. இதே போல யாக புரோகிதர்களாகவே சொல்லப்படுகிறது.

மறுபடியும் பசிக்கு வருவோம். இப்போது நாம் ஹோட்ட லுக்குச் சென்றால் என்ன செய்கிறோம். நமக்குப் பிடித்த பட்சணம் என்ன என்று பார்த்து அதை ஆர்டர் செய் கிறோம். இதே போல் வீட்டில் அம்மாவிடம்... "அம்மா... இன்னிக்கு இட்லி, தேங்காய் சட்னி வேண்டும்' என்கி றோம். மதிய சாப்பாடு என்றால்... "நான் பருப்பு போட்டு சாம்பார் அல்லது கறி எடுத்துக் கொண்டு வந்து கொடுத்து தலைக்கறியை குழம்புல போட்டு... ஈரலை மசாலா போட்டு தனியா எடுத்து வை..." என அசைவப்

ப்ரியர்கள் தங்கள் வீடுகளில் இல்லத்தரசிகளிடம் கேட் கிறார்கள். இதே போல வேத தேவதைகளும்... தங்க ளுக்கு என்னென்ன வேண்டும் என கேட்டிருக்கின்றன. அதற்கு ஏற்றாற் போலத்தான் பசுக்களும் இடம் பெற்றி ருக்கின்றன.

உதாரணங்களைப் பாருங்களேன். இந்திரனுக்கு பொதுவாக காளைமாட்டு மாமிசம் அல்லது எருமை மாட்டு மாமிசம்தான் பிடிக்குமாம்.

அதே போல சூரியன் தேவதைக்கு அவன் பிரகாசமான வன் என்பதால் வெண்மை நிற ஆண் ஆடு தான் பலியி டப்படும்.

சில இடங்களில் வெட்டப்படும் மாடுகள். சில இடங்க ளில் மூச்சுத் திணற வைக்கப்பட்டு சாகடிக்கப்படுகின் றன.

சாகும்போது... மாடுகளுக்கும் ஒரு மந்த்ரத்தை சொல்கி றார்கள்.

"ஏ... பசுவே (மாடு, ஆடு) நீ இறக்கவில்லை. உனக்கு எந்தவிதமான துன்பமும் தரப்படவில்லை. நீ தேவதை களை ஒரு இனிமையான ஆனந்தமயமான பாதை வழி யாக அடைகிறாய்".

பலி பட்டியலையும்... யாக சாலையின் அமைப்பையும் பார்த்திருப்பீர்கள்.

பொதுவாகவே யாகப் பசுவின் சடலத்தை பரிவர்த்தனை செய்யும் விஷயத்தில் இரண்டுவித சாஸ்த்ர அனுஷ்டா னங்கள் காணப்படுகின்றன. நாம் ஏற்கனவே பார்த்தது போல் மாட்டின் உள்தோல் "வபா" உரிக்கப்பட்டு யாக குண்டத்தில் போடப்படுகிறது. அப்போது அக்னி படுவே

கமாக எரிகிறது. "வபா'வை போட்டவுடன் தீ ஜ்வாலைகள் உற்சாகத்தால் உயர்ந்து உயர்ந்து எரிகின்றன.

எப்படி என கேட்கிறீர்களா?... அப்படி அந்த "வபா'வுக்கு என்ன விசேஷம் என்று... நக்கீரன் தம்பி மூல்யமாக ஒரு Zoology (விலங்கியல்) Teacher இடம் கேட்டுப் பார்த்தோம்.

நாகப்பட்டினம் ஜில்லா திருக்கண்ணங்குடி என்னும் திவ்ய தேச புனித ஊருக்குப் பக்கத்தில் உள்ள 'பட்ட மங்கலம்' என்னும் ஊரைச் சேர்ந்தவரான நரேஷ்குமார் என்ற Zoologyயில் எம்.எஸ்.சி. எம்ஃபில். பிஎட் படித்த பட்டதாரி விளக்கம் சொன்னார்.

"மாட்டின் தோல் 3 அடுக்குகளாக இருக்கிறது. வெளிப்புறம் இருக்கும் கடினமான தோல் எபிடெர்மல் (Epidermal) என அழைக்கப்படுகிறது. இதற்கு அடுத்து இரண்டாவதான அடுக்குக்கு dermal என்று பெயர். இதற்கும் உள்ளே மூன்றாவதாக உள்ள தோலுக்கு பெயர்தான் Subdermal என்னும் உள்சவ்வு. இந்த சவ்வின் scientific name என்னவென்று கேட்டால் பென்னிகுலஸ் அடிப்போஸஸ் (penniculus adiposus).

இந்த உள்சவ்வின் விசேஷம் என்னவென்றால்...

மிக அதிகமாக கொழுப்புச் சத்துக்களை தன்னுள்ளே தேக்கி வைத்துக் கொண்டிருக்கும். மேலும் இது Thermal Insulator. அதாவது வெப்பம் கடத்தாமல் இருக்கும் தன்மை கொண்டது என்பது நரேஷ் சாரின் விளக்கம்.



மிக அதிகக் கொழுப்பு என்றால் யாகத் தீயில் போட்டதும் எக்கச்சக்கமாக தீயை எரியத் தூண்டும். அதாவது யாக குண்டத்துக்கு பல குடம் நெய்யை ஊற்றுவதற்கு சமமானது இந்த பசுவின் உள்தோலை போடுவதும்,

இந்த scientific விளக்கத்துக்குப் பிறகு "வேதகால யாக ரிஷிகளின் அறிவுக்கு எவ்வளவு கொழுப்பு இருந்திருக்கும் என யூகிக்கத் தோன்றுகிறதல்லவா.

பசுவின் உள்தோலின் மகிமையை இப்போது மேல் நாட்டு விஞ்ஞானம் சொல்கிறது. ஆனால்... அன்றைக்கே வேத ரிஷிகள் கண்டுபிடித்து பயன்படுத்தியும் வந்திருக்கிறார்கள் என்ற செய்தி ஆச்சரியம் தருகிறதல்லவா?

சரி... முதல் அனுஷ்டான முறையைப் பார்த்தோம். இரண்டாவது?...

மாட்டின் மீதி பாகங்கள் பலவாறாக பிரிக்கப்பட்டு அதில் ரத்தம் உட்பட முக்கியமானவை ஹோம அக்னியில் யாக தேவதைகளுக்காக போடப்படுகின்றன. மீதம் உள்ளவை யாகம் நடத்தும் மதத் தலைவர்களால் உண்ணப்படுகின்றன.

தேவதை சாப்பிட்ட மிச்ச மாமிசத்தை சாப்பிட்டால் அது மருந்தின் குணம் உடையது என்றும்... அது தேவதைகளின் சக்தியையே தங்களுக்கு அளிப்பதாகவும் நம்பப்

பட்டது. இப்படியாக 5 வித உயிர்ப்பலிகள் யாகங்களில் கொடுக்கப்படுகின்றன. குதிரை செம்மறி ஆடு, வெள் ளாடு, காளை. மொத்தம் 4 ஆயிற்று. 5-வது?...

யாகபீடத்தின் அடிப்பக்கத்தில் 5 விலங்குகளின் தலையை கட்டித் தொங்கப்போடுவது வேதகால வழக் கம். அதில் 4 விலங்குகள் பெயரை சொல்லிவிட்டேன். 5-வது விலங்கு?...

அதற்கு முன் அந்த யாகம் பற்றி சொல்லிவிடுகிறேன். 'அஸ்வமேதம்' என்ற யாகத்தில் குதிரையாக நெருப்பில் பலியிடப்படுகிறது என்பதை பார்த்திருப்பீர்கள். அதே போல புருஷமேதம் என்னும் யாகத்தில்தான் அந்த 5-வது விலங்கின் தலையை கட்டித் தொங்க விடுவார்கள்.

புருஷமேதம்?... ஆம். அஸ்வமேதம் என்றால் குதிரை கொல்லப்படும். புருஷமேதம் என்றால் புருஷனை கொல்வார்கள். புருஷன் என்றால் வடமொழியில் ஆண். அதாவது ஆண்மகனை யாக குண்டத்தில் போட்டுக் கொல்லுவதுதான் புருஷமேத யாகம். "ஆட்டைக் கடிச்சு மாட்டைக் கடிச்சு கடைசியில மனுஷனை கடிக்க வந் துட்டியா?...' என கிராமப் புறங்களில் ஒரு சொற்றொடர் உலவுவதை கேட்டிருக்கிறீர்களா?...

அதற்கு அப்படியே பொருந்தக்கூடிய யாகம்தான் புருஷ மேத அல்லது நரமேத யாகம்.

முதலில் வெள்ளாடு, அப்புறம் காளைமாடு, அப்புறம் மனுஷன்.

ரிக்வேதம் 2-ம் காண்டம் 2-ம் பட்சம் என நினைக்கிறேன். இது மிக முக்கியமான, மோசமான வரி.

"புருஷா ஆகுதி அஸ்யப் ப்ரீதமா..."

என்ன அர்த்தம்?...

"டேய்... யாக குண்டத்தில் விளையும் அக்னி இருக்கி றதே... அதற்கு பலி என்றாலே ரொம்பப் பிடிக்கும்.

அதிலும் "புருஷ'ன் ஆகுதியில் விழுவதென்றும் அதா வது மனிதன் நெருப்பில் வீழ்வதால் ரொம்பப் பிடிக்கும். I LIKE MAN MORE THAN OTHER ANIMALS என அக்னி சொல்கிறது.

சும்மா மந்த்ரத்தையும், கருத்தையும் சொன்னால் போதுமா?... எங்காகிலும் நடந்திருக்கிறதா?... சம்பவம் இருக்கிறதா?... சாட்சி இருக்கிறதா?...

இருக்கிறது. ரிக்வேதத்தின் மூன்றாவது காண்டத்தில் அடங்கியிருக்கிற கீதங்களுக்கெல்லாம் கர்த்தா என வர்ணிக்கப்படுகிற விஸ்வாமித்ர முனிவன்கூட புருஷ மேத யாகங்களுக்கு ஆட்பட்ட சிலரை காப்பாற்றியிருக் கிறாராம்.

சரி... சாட்சிக்கு வருவோம். அரிச்சந்திரன். எப்போதும் உண்மையே பேசுபவன் என்ற விதத்தில் இவனை உங் கள் எல்லாருக்கும் தெரிந்திருக்கலாம்.

ஆனால்... உயிருள்ள மனிதனை யாக பலிக்காக நெருப் பில் போட்டவன் அரிச்சந்திரன் என்ற உண்மை உங்க ளுக்குத் தெரியுமா?

அரிச்சந்திரனுக்கு புத்திரன் இல்லை- கடுமையான வருத்தத்தில் வருணனை நோக்கி வேண்டுகிறான். "பாலைவனமாகக் கிடக்கும் என வாழ்க்கையில் உன் அருள் மழையைப் பொழி. அப்போதாவது என் வாழ்க் கையில் புத்திரன் என்னும் புல் முளைக்கட்டும். அப்படி முளைத்தால் அது எனக்கே கூட அல்ல... நான் அவனை உனக்கே யாகம் செய்து அர்ப்பணம் செய்து விடுகி

றேன்" என அரிச்சந்திரன் வேண்ட... சரி சந்திரா... -என்று ஆமோதித்த வருணனும் அரிச்சந்திரனுக்கு மகனை கொடுத்தான்.

புத்திர பாசம் யாரை விடும்?... தன் மகனை பாசமாய் வளர்த்த அரிச்சந்திரன் "இவனை எப்படி யாக குண்டத் தில் போடுவது?...' என யோசித்தான். இவ்விஷயம் மக னுக்கும் தெரியவர... அடப்பாவி ஊர் உலகத்தில் ஒவ் வொருத்தனும் தன் மகன் வாழ்வாங்கு வாழவேண்டும் என்றுதான் பெற்றெடுப்பார்கள். ஆனால்... சாகடிக்கி றேன் என்று சொல்லி நம் அப்பன் நம்மை பெற்றெடுத் திருக்கிறானே. ஒருவேளை நம்மை தூக்கி யாக நெருப் பில் போட்டுப்பொசுக்கி விட்டால் என்ன செய்வது என பயந்து காட்டுக்குள் ஓடி தலைமறைவாகி விட்டான்.

வருணன் பார்த்தான். அரிச்சந்திரன் கொடுத்த வாக்கை காப்பாற்றவில்லையே... இன்னும் மகனை நமக்கு அர்ப் பணிக்கவில்லையே... அவனை சும்மாவிடக்கூடாது என முடிவெடுத்து அரிச்சந்திரனுக்கு மகோதர நோயை உண்டாக்கிவிட்டான்.



அப்பன் நோயால் பீடிக்கப்பட்டிருக்கிறான் என்று காட்டி லுள்ள மகனுக்கு தகவல் கிடைத்து அவன் நகரத்துக்கு

வர தயாரானான். அப்போதுதான், 'நம்மை யாகத்தில் போட்டு எரிப்பதாக அப்பா கொடுத்த வாக்கை நிறை வேற்றவில்லை... அதனால்தான்...' என யோசித்த அரிச் சந்திரனின் மகன் ஒரு முடிவுக்கு வந்தான்.

நாமும் சாகக்கூடாது. அப்பாவும் சாகக்கூடாது. ஆனால் புருஷமேத யாகம் நடக்கவேண்டும். என்ன செய்யலாம்.

அரிகிரதன் என்பவனிடம் போனான். இதுபோல் விஷ யத்தை சொன்னான். "யாகத்தில் போட்டு எரிக்கவேண் டும். அதற்கு ஒரு ஆண் மகன் தேவைப்படுகிறான். உங் கள் மகன் சுனச்சேபனை நீங்கள் யாகத்துக்கு விற்பதா கக் கேள்விப்பட்டேன். கிடைப்பானா?..." எனக் கேட்க,

அரிகிரதனும் தன் மகன் சுனச்சேபனை யாகம் பலியி டுவதற்காக விற்று விட்டான். அவனை வாங்கிச் சென்ற அரிச்சந்திரனின் மகன், அப்பாவிடம் கொடுத்து "இந் தாப்பா இவனைப் போட்டு எரித்து யாகம் செய்...' எனக் கூற... அதன்படியே சுனச்சேபனை தூக்கி யாகத்தில் போட்டு எரித்தான் அரிச்சந்திரன். இதையடுத்து கோபம் தணிந்ததால் அரிச்சந்திரனுக்கு உண்டாக்கிய மகோதர நோயையும் நீக்கி விட்டான் வருணன்.

இதே கதை இன்னொரு திசையிலும் செல்கிறது. அதாவது யாகத்தில் போட்டு எரிப்பதற்காக சுனச்சே பனை வாங்கிக் கொண்டு செல்கையில், அவன் தப் பித்து விஸ்வாமித்ர முனிவரிடம் ஓடிச்சென்று என்னை காப்பாற்றுங்கள் எனக்கெஞ்சியதாகவும்... விஸ்வாமித் ரர் அவனை காப்பாற்றி தன் மகனாக்கிக் கொண்டதாக வும் இன்னொரு திசையிலும் பயணிக்கிறது.

ஆக... இந்த "கதை'களை ஒதுக்கிவிட்டுப் பார்த்தோம் என்றால் நமக்கே உண்மை தெளிவாகிறது. அதாவது

யாகத்தில் மனிதனை போட்டு எரிக்கும் பழக்கம் இருந்திருக்கிறது. இன்னும் கொடுமையாக இதற்காக... மனிதனை விலைபேசி வாங்கும் கொடுமையும் நடந்திருக்கிறது.

யாக பீடத்திற்கு வலிமை தருவதற்காக என்று கருதப்பட்டு இத்தகைய நரபலி சடங்குகள் ஏற்படுத்தப்பட்டன. இந்த நரபலி யாகம் அனுஷ்டான நூல்களில் மிக விரிவாக கூறப்படுகிறது. ஆயினும் வேதகால இந்தியாவில் நரபலி நடந்ததற்கான முழுமையான ஆதாரங்கள் இல்லை. புத்தர் வரலாற்றுக்கூறுகள் அடிப்படையிலும் நரபலிக்கு அதிக ஆதாரங்கள் இல்லை.

ஆனாலும் நடந்திருக்கிறது.

கல்யாணம் ஆகறதா இருக்கட்டும்... வேலை கிடைக்கறதா இருக்கட்டும்... வெளிநாடு போறதா இருக்கட்டும். இப்போது பலபேர் பாஸ்போர்ட் விசாவுக்கு முன்னரே ஜாதகம் பார்த்துவிடுகிறார்கள்.

உனக்கு இவன் இத்தனையாவது இடத்திலே இருக்கிறானம்மா. குருவுக்கு நீ பரிகாரம் பண்ணனும்... நீடாமங்கலம் பக்கத்துல இருக்குற ஆலங்குடிக்கு போ... ஒவ்வொரு வாரமும் வியாழக்கிழமை போ.

டேய்... உன் சனி உச்சத்தில் இருக்கான். நீ உடனே காரைக்கால் பக்கத்துல இருக்குற திருநள்ளாறுக்குப் போய்ட்டு வரணும். அங்க பரிகார பூஜை நடத்தணும். சீக்கிரம் சனி இன்னும் கோபமாயிடப் போறான்'.

இது ஜோசியர்கள் நம்பிக்கையாளர்களைப் பார்த்து இன்றும் சொல்கிற வார்த்தைகள். இவற்றையும் நம்பி

நம் மக்கள் எந்த கிரகத்துக்கு எந்த கோயில் என்று சுற்றித்திரிகிறார்கள்.

இது ஒருபக்கம் என்றால்... இன்னொரு பக்கம்... "ஒரு கிரகம், ரெண்டு கிரகத்தைச் சுற்றி என்ன ஆகப்போறது நவக்ரகத்தையும் சுத்தணும்...' -என நினைத்து நவக்ரக சிலைகளை சுற்றிச் சுற்றி வருகிறார்கள்.

நான் கேட்கிறேன்...

பூமியிலிருந்து சனி என்ற கிரகத்துக்கு எவ்வளவு தூரம்?... நமது நக்கீரன் தம்பியிடம் கேட்டேன். அவர் இண்டர்நெட்டுக்கு போய்... வானியல் என் சைக்ளோபீடியாவில் புகுந்து "சர்ச்...' செய்ய ஆரம்பித்து ஒரு தகவல் பலகையை என்னிடம் நீட்டினார். என் வாயே பிளந்துவிட்டது உங்கள் வாயும் பிளக்கும்.

அதாவது பூமி என்ற நாம் வாழும் கிரகத்திலிருந்து சனி என்ற கிரகம் எவ்வளவு தூரத்தில் உள்ளதென்றால்... 1,321,416,800 கிலோமீட்டர்களாம். அதாவது 132 கோடியே 14 லட்சத்து 16 ஆயிரத்து 800 கிலோமீட்டர். யப்பா... இவ்வளவு தூரத்தில் உள்ளது சனி கிரகம்.

ஆனால்... சென்னையிலிருந்து வெறும் 260 கிலோமீட்டர் தூரமே பயணித்து சனி கிரகத்தை அடைந்து விடுகிறாள் நம்ம ஊர் ஆள். காரைக்காலுக்கு சென்னையிலிருந்து 250 கி.மீ. அங்கிருந்து 10 கிலோமீட்டர் திருநள்ளாறுக்கு.



132 கோடி கிலோமீட்டர்களையும்... 250 கிலோ மீட்டர்களையும் ஒப்பிட்டுப் பாருங்கள். அதாவது நம்மிடமிருந்து உண்மை 132 கோடி கிலோமீட்டர் தாண்டியிருக்கிறது. பொய்... அதாவது மூடநம்பிக்கை, அறியாமையானது ரொம்பப் பக்கத்தில் 250 கி.மீ. தூரத்திலேயே உள்ளது.

இதே போல... நம்ம குருபகவான் தஞ்சாவூர்- திருவாரூர் ரூட்டில் நீடாமங்கலம் பக்கத்தில் ஆலங்குடி என்னும் இடத்தில் இருக்கிறாராம். உண்மையான குரு அதாவது வியாழன் என்ற கிரகம்... பூமியிலிருந்து 58 கோடியே 80 லட்சம் கிலோமீட்டர்கள் தூரத்தில் உள்ளது.

ஆனால்... திருச்சியிலிருந்து நம்ம ஆள்... "குரு'வை பாக்கப் போறேன்னு சொல்லிட்டு 100 கிலோமீட்டர் தூரம் பயணித்து ஆலங்குடியை அடைந்து விடுகிறான். நீங்கள் யோசித்துப் பார்க்க வேண்டும்.

நவக்ரகம் எங்கே இருக்கிறது? நாம் அதை எங்கே பிடித்து வைத்திருக்கிறோம்.

நவக்ரகத்தை அடிப்படையாக வைத்து நாம் இப்போது கணிக்கும் ஜாதகம் எல்லாம் வெகு சமீபத்தில் ஏற்பட்ட பழக்கம்.

உண்மையில் நவக்ரக வழிபாட்டைக் கூட நாம் கண்டுபி டிக்கவில்லை.

க்ரீக் தேசத்தைச் சேர்ந்த ரிஷிகள் ஐந்து கிரகங்களை கண்டுபிடித்தார்கள். மற்ற 2 கிரகங்களை நம் தேசத்து ரிஷிகள் அறிந்தார்கள். போகப் போக... ராகு, கேது எல் லாவற்றையும் சேர்த்து நவக்ரகம் என்று சொல்லி விட் டார்கள்.

உலகம் இயற்கையாக இயங்குகிறது. அக்னி, ஸோமன், இந்திரன், ஆகாசம், பூமி, நட்சத்திரம் போன்றவற்றை வேதம் ஒப்புக்கொண்டது. இதோ வானசாஸ்திரம் வளர வளர கருத்துக்கள் உண்டாகிவிட்டன.

"மிலேச்சாயி யவனாஹா
தேஷீ சம்யிக் சாசனம்
இதம் க்ருதம் ரிஷிவது தேவி பூஜ்யந்தே
கிம்புனஹா தெய்வ வித் த்விஜாஹா..."

என்று போகிற பாஸ்கர சித்தாந்தக்காரரின் வரிகள் இவை...

"பழங்காலத்தில் வான சாஸ்திரத்தை நன்கு கவனித்த ரிஷிகள் மிலேச்ச தேசமான கிரேக்க தேசத்தில் இருந் தார்கள். அவர்களை நாம் வான சாஸ்திரத்தின் மூலப் புருஷர்களாக ஒப்புக் கொள்கிறோம். அவர்கள் சொன் னதிலிருந்து கிரகங்களை பற்றின கவனத்தை நாம் செலுத்த ஆரம்பித்தோம்..."

என்கிறது அந்த 'வான' வரிகள். இப்படியிருக்க... வைகாச ஆகமத்தினை உபதேசித்த வைகானசர்.

"ஆகமத்தின் கர்த்தாவான பகவான் கிரகம் மூலமாகத் தான் வேலை செய்து லோகத்தை பார்க்கிறார். கிரகங் களை பூஜியுங்கள். பூஜித்து காரியத்தை ஆரம்பித்தால்

வெற்றி உண்டாகும்" என்கிறார். இப்படித்தான் நவக்ர கங்கள் தேவதைகளோடு சேர்ந்து விட்டார்கள்.

வேதத்தில் நவக்ரக மந்த்ரம் எதுவும் கிடையாது. பாஞ்ச ராத்ர ஆகமும் நவக்ரஹம் பற்றி பேசவில்லை.

இங்கே ஒரு முக்யமான விஷயத்தைச் சொல்கிறேன்.

திருமணத்தை விளக்கும் சூத்திரக்காரரர்கள் ஆயிரக்க ணக்கான வருஷங்களுக்கு முன்பாக இருந்தவர்கள். அவர்கள் முடிவாகக் கூறும் காலத்தில்...

"பெண்ணும் பிள்ளையும் நேருக்கு நேராக பார்த்துக் கொள்ளச் சொல்லி இரண்டுபேருக்கும் மனஒற்றுமை இருந்தாலே மணம் செய்து கொள்ளலாம். கிரகங்க ளையோ நட்சத்திரங்களையோ பார்த்தால்கூட இருவ ருடைய மன ஒற்றுமைதான் முக்யம்" என்கிறார்கள்.

நானும் அதைத்தான் சொல்கிறேன்.

கிரகங்களைப் பற்றிப் பார்த்தோம். பிரபஞ்சத்தில் பூமி தாண்டி எங்கெங்கோ இருப்பவற்றுக்கும் பெயர் கிரகம் தான். நாம்... அன்றாடம் வசிக்கும் வீட்டிற்கு பெயரும் க்ர ஹம்தான். நவக்ரஹங்களைப் பற்றி வேதம்

பிரஸ்தாபிக்கவில்லை. ஆனால் நமது கிரஹத்தைப் பற்றி... அதாவது அவனவன் க்ரஹம் (வீடு) பற்றி வேதம் ரொம்ப விஸ்தாரமாக பேசுகிறதப்பா.

அதற்கு முன் வேதத்தில் உள்ள சில தெய்வங்களை உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறேன்.

ப்ருத்வி (பூமி), ராத்ரி (இரவு) ராத்ரியை வேதம் சொல் கிறது விடியலின் தங்கை என்று. எவ்வளவு அற்புதமான சித்தரிப்பு. பின் காடுகள் தெய்வம் அதாவது ஆரண்யன்.



அக்னானி, இந்திராணி, வருணானி என்பன பெண் தேவதைகள்.

இரட்டை குழந்தைகள் போல இரட்டை தெய்வங்க ளையும் பெற்றெடுத்து வைத்திருக்கிறது வேதம். அவை த்யாவா-ப்ருத்வி. அதாவது வானமும் பூமியும்தான்.

இவ்வாறு வேதம் தெய்வம், தேவதை எனக்கூறுவது எல்லாமே இயற்கையைத்தான். சரி... வீட்டைப் பற் றிப் பேசிவிட்டு திடீரென எதற்கு இப்படி தெய்வங்கள் பெயரை அடுக்கிக் கொண்டிருக்கிறீர்கள் என்று கேட்கி றீர்களா?...

பொறுங்கள்.

இப்படிப்பட்ட தெய்வங்களில் பல வகைகள் உண்டு. அவற்றில் வேலைக்கார தெய்வங்கள் என்றொரு வகை உண்டு.

சில தெய்வங்கள் மனிதர்களுக்கு வேலைக்காரர்க ளாக வீடுகள், வயல்கள், இவற்றை பாதுகாப்பவர்களாக இருக்கின்றனர். இவர்களில் வீட்டை பாதுகாக்கிறவர் ஏன் வீடாகவே ஆனவர் 'வாஸ் தோஸ்பதி' என்ற தெய் வம்.

இந்த சொல்லைப் படித்ததும் உங்களுக்கு தெரிந்து விட்டதா... நாம் எந்த சடங்கைப் பார்க்கப் போகிறோம் என்று.

ஆமாம். க்ரகப்பிரவேசம் மற்றும் வாஸ்து சாஸ்திரம்.

ரிக்வேதம் வீட்டைப் பாதுகாக்குமாறு வாஸ்தோஸ்பதியிடம் வேண்டுகிறது. அதாவது புது வீடு கட்டி மக்கள் அந்த வீட்டின் முன் நின்று வேண்டுகிறார்கள். அதாவது வீட்டில் வசிக்கும் நமக்கு... வளமாக வாழ வியாதியின்றி வாழத்தான் இந்த வேண்டுதல்.

ரிக் வேதத்தின் இம் மந்த்ரத்தை பாருங்கள்.

"வாஸ்தோஸ்பதே ப்ரதிஜானி
கஸ்மானு ஸ்வாவேஷா
அனமிஸா பவானாஹா
யத்வேமேஹே ப்ரதிதந்நோது
ஷக்மயா ச்ரும்ததாது
சக்ஷிஹீ ரன்வயா காதுமத்யா
ஆவா சேஷமேக உதயோகே வரன்னி..."

வாஸ்து தேவனிடம் இந்த மந்த்ரம் வேண்டுவது என்ன?...

"ஏ... நான் குடியிருக்கப் போகும் வீடே... என் தெய்வமே... எங்களை பாதுகாப்பாயாக. உன்னுள் வசிக்கும் அனைவருக்கும் நல்லெண்ணம் உண்டாகும் படியாக பண்ணுவாயாக.

வாஸ்துவே நான் உன்னை இனி இடிக்கமாட்டேன். உன்னை துன்புறுத்த மாட்டேன். உன்னை தாக்கமாட்டேன்.

அப்பா பிள்ளையை எப்படிப் பார்த்துக்கொள்கிறாரோ... அதே போல் நீ எங்களை பார்த்துக் கொள்வாய் வாஸ்துவே... (வீடே...)

இதுதான் வாஸ்தோஸ்பதியாகிய வீட்டிடம் மக்கள் வைக்கும் வேண்டுகோள். இதைத்தான் பிறகு வாஸ்து சாஸ்திரம் என்ற பெயரில்... "அந்தத் திசை அவனுக்கானது இந்தத் திசை இவனுக்கானது இதை இங்கே வை. அதை அங்கே வை..." என இட்டுக்கட்டி விட்டார்கள்.

இன்னும் கேளுங்கள். வீட்டைக் கட்டி வேண்டுகிறார்கள். வீடு எப்படிக் கட்டினார்கள்?...

"ப்ரம்ம சதே சத்ரஞ்ச்சே
பூர்வே ஸ்தூணே..."

கிழக்குப் பக்கம் இரண்டு மூங்கிலை ஊன்று. மேற்குப் பக்கம் இரண்டு மூங்கிலை ஊன்று. வடக்குப்பக்கம், தெற்குப்பக்கம் என 4 பக்கமும் மூங்கில்களை ஊன்றி அவற்றின் மேலேயும் மூங்கில்களை வைத்துக் கட்டு. அவற்றின் மேல் இலைகளைப் பரப்பி மூடு. இதுதான் உன் வீடு. இவர்தான் என் வாஸ்தோஸ்பதி.

என்று அந்த மந்த்ரம் சொல்கிறது இன்று க்ரகப்பிரவேசத்தில் வாத்யார் சொல்கிறார். அது மாடி வீடாக இருந்தாலும் சரி. பங்களாவாக இருந்தாலும் சரி. "க்ரஹப் பிரவேசம் பண்ணும்போது வாத்யார் சமஸ்கிருதத்தில் சொல்கிறார்...

"ஏ... வாஸ்தோஸ்பதியே இந்தப் பக்கம் ரெண்டு மூங்கில் அந்தப் பக்கம் ரெண்டு மூங்கில் மேலே மூங்கில் அதன் மேல் இலை. இப்படிப்பட்ட உன்னை வணங்குகிறேன். என்னை பாதுகாத்திடு..."

மந்த்ரத்தை கேட்டு விட்டுப் பார்த்தால் வழ வழ தரை... தேக்குமரத் தூண்...மேலே பல அடுக்கு மாடி... சிரிப்பு தானே வரும்.

'ஒருமுறை கட்டிய வீட்டை மறுபடி ஏதும் பண்ணாதே...' என வாஸ்தோஸ்பதியை மையமாக வைத்துச் சொன்னது வேதம். இன்றோ... அதே வாஸ்தோஸ்பதியை வாஸ்துவாக்கி... இஷ்டத்துக்கு மாற்றி தொழிலாக்கி விட்டார்கள். அவர்கள் வேதத்துக்கு விரோதமானவர்கள் என்பதை விட வேறென்ன சொல்ல...

வாஸ்து சாஸ்திரம் என்றால் வீடு கட்டுதல் என்றுதான் அர்த்தம். இன்றோ அதன் மேல பற்பல அர்த்தங்களை இட்டுக்கட்டி விட்டனர்.

அடுத்து நாம் பார்க்கப் போகும் சடங்கு உபநயனம். இன்றைய அர்த்தத்தில் சொல்வதானால் பூணூல் போடுதல். ஆனால் இது தப்பு.

இதென்ன பிராமணர்களுக்கு மட்டுமே உள்ள சடங்கை இப்படிப் பெரிதுபடுத்துகிறீர்கள் என்று கேட்கிறீர்களா?... எவன் சொன்னது இது பிராமணர்களுக்கு மட்டும் உள்ளதென்று. இந்து மதம் எங்கே போகிறது முதல் பாகத்திலேயே இந்தச் சடங்கைப் பற்றி நான் குறிப்பிட்டிருக்கிறேன்.

இப்போது இந்த "சடங்கு'களின் கதையிலும் இந்த சடங்கை பற்றிய குறிப்பிட வேண்டிய அவசியம் இருப்பதால் இன்னும் கொஞ்சம் புதுத் தகவல்களை சொல்கிறேன்.

உபநயனம் என்றால் என்ன அர்த்தம்?... நன்றாக உங்கள் தலையில் எழுதிக் கொள்ளுங்கள். உபநயனம் என்

றால் ஸ்கூலுக்குப் போவது என்று அர்த்தம். அதாவது பள்ளிக்குப் போவது. இந்த காலத்தில் தானே ஸ்கூல், டொனேஷன் என்ற கண்றாவியெல்லாம்.

அந்த காலத்தில் ஸ்கூல் ஏது? ஆச்சாரியார் அதாவது ஆசிரியர் இருப்பார். அவர் சாஸ்திரங்களைக் கற்றுத் தேர்ந்தவராக இருப்பார். அவரது வீட்டுக்கே போய் அவ ரிடம் இருந்து வித்யைகளைக் கற்கவேண்டும்.

கல்யாணச் சடங்குகளின் போது பார்த்தோம். ஞாபகம் இருக்கிறதா? குழந்தைகளுக்கான சடங்குகளை.

மூன்றாவது வயதிற்குப் பிறகு ஆண் குழந்தைக்கு முடிதி ருத்தும் வைபவம் செய்கிறார்கள். இதே விதமாக 16-வது வயதில் முகவாய்க்கட்டை சவரம் செய்யப்படுகிறது.

இதையெல்லாம் தாண்டி இதற்கு முன்பாகவே செய்ய வேண்டிய முக்கிய வைபவம் உபநயனம்.

எட்டு வயது பிராமணப் பையன் மதப் புரோகித ரான ஆச்சார்யரிடம் ஒப்படைக்கப்படுகிறான். மொட் டையடிக்கப்பட்ட அந்தப்பையன் ஹோமத்தின் அருகே நிறுத்தப்பட்டு... புல்லால் ஆன ஒருவித கயிற்றை அவன் இடுப்பில் கட்டுகிறார். பிறகு ஆச்சர்யர் அந்தச் சிறுவன் காதில் ஏதோ ஓதுகிறார். அதற்குப் பெயர்தான் பிரம் மோபதேசம்.

இதை காயத்ரீ ஜெபம் என்பார்கள். காயத்ரீ ஜெபத்தை சூத்ரர்கள் யாரும் கேட்கக் கூடாது என்பதால் அது அவ னுக்கு மட்டும் காதோரம் ஓதப்படுகிறது.

அதென்ன காயத்ரீ ஜெபம்?
"தத் சவிதுஹி வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹி தியோயன
ப்ரச்சோயா யாது..."

இதுதான் காயத்ரீ ஜெபம். இதன் அர்த்தம் என்ன?

சூரியனே... எனக்கு எல்லாவிதமான புத்தியையும் வழங்கும். உலகின் புற இருளை அகற்றுகிற நீ... என் அக இருளான அறியாமையையும் விரட்டி கல்வி, அறிவு, வெளிச்சம் பாய்ச்சுவாயாக..." இதுதான் இந்த மந்த்ரத்தின் அர்த்தம்.

காயத்ரீ ஜெபம் என்றால் பலபேர் ஏதோ காயத்ரீ என்பது பெண் பெயர் என எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இன்னும் சொல்லப் போனால்... இந்த ஜெபத்தை பெண்கள் கேட்கவே கூடாது என்பதுதான் க்ரமம்.

அப்படியென்றால் காயத்ரி என்பதற்கு என்ன அர்த்தம்?

"காயந்தம் த்ராயதஹி' என்பதுதான் சுருங்கி காயத்ரி என ஆகியிருக்கிறது. அதாவது இந்த மந்த்ரத்தை யார் ஜெபிக்கிறார்களோ அவர்களை இந்த மந்த்ரம் காக்கிறது என்று அர்த்தம்.

மற்றபடி காயத்ரி ஜெபத்துக்கும் அந்தப்பெண் பெயருக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. இன்னும் சொல்லப் போனால் காயத்ரீகள் காயத்ரி ஜெபத்தை அறியவே கூடாது. அதாவது கல்வி கற்கவே கூடாது.

சரி... உபநயனம் என்றால் பையன் கல்வி கற்க அனுப்பப்படுவது என பார்த்தோம். அப்படியென்றால் பெண்டுகள் கல்வி கற்கக்கூடாது என்ற நிபந்தனை அதற்குள்ளே ஒளிந்திருக்கிறது உங்களுக்கு தெரிகிறதா...?

உபநயனம் என்றால் ஸ்கூலுக்குப் போ...? சரி... இதில் பூணூல் போடும் பழக்கம் இருக்கிறதே... அது ரொம்பப் பொல்லாதது. கல்வி கற்கப் போகும்போது பூணூல் போட்டுக் கொள்ள வேண்டும் என்று எந்த க்ரந்தமும் சொல்லவில்லை.

அப்படியென்றால் பூணூல்?...

சொல்கிறேன். இதற்கு தமிழில் பூணூல். ஆனால் இதன் இயற்கைப் பெயர் யக்ஞோபவீதம். அதாவது... யக்ஞம் பண்ணும்போது போட்டுக் கொள்வது.

யக்ஞம் என்றால் யாகம், உபவீதம் என்றால் பூணுகின்ற நூல். யாகம் செய்கையிலே துணியால் ஆன வஸ்தி ரத்தை குறுக்காக போட்டுக் கொள்வார்கள். பின்னாட் களில்... இந்த வஸ்திரம் இடைஞ்சலாக இருக்கிற படி யால்... அதை மெல்லிய நூலாக்கிவிட்டார்கள். இதுதான் பூணூல் வந்த கதை. உபவீதம் என்ற பதத்திற்கு மட்டுமே பூணூல் என்று அர்த்தமாகும்.

யக்ஞோபவிதம் என்ற பதப்படி பார்த்தால் யாகத்தின் போது அணியும் நூல். அப்படிப் பார்த்தால் இன்று பூணுல் அணிபவனெல்லாம் யாகம் செய்யவேண்டும். செய்கி றானா?...

இதுமட்டுமல்ல உபநயனத்துக்கும், பூணூலுக்கும் எவ் வித சம்பந்தமும் கிடையாது. படிக்கப் போகும்போது பூணூல் தேவையில்லை. யாகம் செய்யும் போதுதான் யக்ஞோபவீதம் தேவை.

இதில் மிகவும் முக்யமானது, ஜாதிப்பிரிவு முறைப் படி முதல் மூன்று ஜாதியைச் சேர்ந்த பையன்களுக்கு முறையே 8-11-12 என்கிற வயதுக்ரமத்தில் ஒரு மதப்பு ரோகிதரான ஆசிரியரிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்" என்கிறது வேதம்.

அதாவது... பிராமணப் பையனுக்கு 8 வயதிலும், க்ஷத் ரிய பையனுக்கு 11 வயதிலும், வைஸ்யப் பையனுக்கு 12 வயதிலும் உபநயனம் பண்ண வேண்டும். அதாவது

ஆச்சார்யரிடம் வித்தைகள் கற்றுக் கொள்ள அனுப்ப வேண்டும்.

இதிலிருந்து என்ன தெரிகிறது. பிராமணன், க்ஷத்ரியன், வைஸியன் என மூன்று ஜாதிக்காரர்களுமே வித்தை கற்றுக் கொள்ள வேண்டும். அதிலும் இவர்களில் பிராமணனே முதலில் ஆச்சார்யரிடம் சென்று வித்தை கற்க வேண்டும்.

ஆனால்... காலம் செய்த ஜாலத்தில் இந்த உபநயனம் பிராமணர்களுக்கு மட்டுமே பாத்யமாயிற்று.

இன்றைய நிலவரப்படி உபநயனம் என்ற சொல்லின் உண்மையான அர்த்தத்தை வைத்துப் பார்த்தால்...

சூத்ரர்கள், ஹரிஜனங்கள் வரை எல்லாருமே உபநயனம் செய்து கொள்கிறார்கள். அதாவது பள்ளிக்குச் செல்கிறார்கள். பூணூல் போடவேண்டும் என்று அவசியமே இல்லை. பாரதியார் கனகலிங்கம் என்னும் ஹரிஜனப் பையனுக்கு பூணூல் போட்டு விட்டானாம். பரவாயில்லை.

ஆனால்... பூணூல் என்பதை பெரிய அந்தஸ்தாக நினைக்கத் தேவையில்லை. இப்போது பெண்கள் கூட உபநயனம் செய்து கொள்கிறார்கள். "காலேஜ் உபநயனம்' வரை போயிருக்கிறார்கள் என்பது வரவேற்கத் தகுந்தது.

நமது நாட்டில் மட்டுமல்ல... பாரசீக தேசத்தில் கூட... 15 வயசுப் பையன் முஸாரஸ்டர் என்னும் பிரிவுக்குள் கையில் புனித நூலுடன் வருகிறான். அவனை மத குருமார்கள் வரவேற்றதாக "சென்ட் அவெஸ்தா' என்னும் பாரசீகர்களின் புனித புத்தகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இப்படி அறிவு பெறுவதற்கான, தெளிவு பெறுவதற்கான "உபநயனம்' என்னும் நிகழ்ச்சியை மடத்தனமான சடங் காக்கிவிட்டனர்.

மனித வாழ்க்கையின் பல சடங்குகளின் வழியே பயணம் செய்தாகி விட்டது. அடுத்த ஒரு பொதுப்படையான ஒரு MASS சடங்கு.

ஆறுகள், சமுத்திரக் கரைகள் இவற்றில் கூட்டம் கூட்ட மாய் முங்கி முங்கி எழுகிறார்கள்... அந்த சடங்கு பற்றித் தான் இப்போது பார்க்கப் போகிறோம்.

வேதம் மொழியைப் பற்றி, வாக்கைப்பற்றி சொல்கிற போது... "இதோ இந்த நதி போல வாக்கு பிரவாகமாக வரவேண்டும்" என்கிறது. அதனால்தான்... அன்று சரஸ் வதி நதி இருந்ததல்லவா? அதன் ஜலப்பிரவாகம் போல வார்த்தைகள் வாக்குகள் வந்து பாயவேண்டும் என்கிற அடிப்படையில் தான்... பிற்பாடு சரஸ்வதி என்ற நதியின் பெயரை... வார்த்தைகள் கடவுளாக்கினர் பின் வந்த சாஸ்திரக்காரர்கள்.

இன்னும் சரஸ்வதி என்கிற பெண் தெய்வம் பிரம்மா வின் மனைவி... கல்வியின் தெய்வம் என்பதெல்லாம் பிற்பட்டது. ஆனால்... அதற்கும் முன்பே நதிகளை தெய் வத்துக்கு மேலான கல்வியாக வணங்கியிருக்கிறார்கள் வேதகாலத்தினர்.

இயற்கையின் படைப்புகளான மலைகளையும் நதிக ளையும் சூரியனையும் வணங்கச் சொல்கிறது வேதம். அந்த வகையில்தான் நதிகளை வணங்கினர்.

ஜலம் அதாவது நீர் என்பது மிகப் புனிதமானது. வேதகா லத்தின் முக்கியக் கடவுளான சூரியனை வழிபடுவதற்

காக சிறு ஜலத்துளிகளைத்தான் பயன்படுத்தி வந்தனர். இன்றும் சந்தியாவந்தனம் என்ற பெயரில் இந்தச் சடங்கு தொடர்ந்து வருகிறது.

கங்கை நதிக்கும் யமுனை நதிக்கும் இடைப்பட்ட ரிஷி களே, மக்களே உங்களை வணங்குகிறேன்... -என நதி களை அடிப்படையாக வைத்து மக்களையும் ரிஷிக ளையும் போற்றியது வேதம்.

ஆனால்... இன்று கும்பமேளா என்றும்... மகம் என் றும் நதிக்கரைகளில் கூட்டம் கூட்டமாய் போய் இறங்கி நதியை அசுத்தப்படுத்துகிறார்கள். கங்கையை புனிதம் என வேதம் முதல் பல நூல்கள் சொன்னது.

அதற்காக பின்னாளில் கிளப்பி விட்டார்களே... கங்கை யில் செத்தால் மோட்சம் என்று.

"யாவதவஸ்தி சகங்காயாம் தாவத் ஸ்வர்க்கே ஸதிஷ் டதி..." என்ன அர்த்தம்?

தீர்த்தங்களில் உன்னதமான தீர்த்தமாகிய கங்கையில் விழுந்து மரணமடைந்தால்... உன் எலும்புகள் எவ்வளவு காலம் கங்கை நதிக்குள்ளே கிடக்குமோ... அவ்வளவு காலம் வரை நீ சொர்க்கத்தில் இருப்பாய்.

இது ஆக்னேய புராணம் அருளும் கூற்று.

அடப்பாவிகளா?... கங்கையை தெய்வமாக பாவித் தால்... சுத்தமாக வைத்துக் கொள்வார்கள் என வேதம் நினைக்க...

தெய்வமே கங்கை தானே. அங்கே விழுந்தால் மோட்சம் கிடைக்குமே என அதில் விழுந்து சாகிறார்கள். இன்று கங்கையில் பிணங்கள்தான் அதிகம் மிதக்கின்றன.

அதை விடுங்கள். மகம் என்றொரு சடங்கு... இந்த நாளில் கூட்டம் கூட்டமாய் போய் குளத்தில் விழுந்து எழுகிறார்கள்.

என் ஊரான கும்பகோணத்தில் மகாமகம் என்னும் பெயரால் எத்தனை பேர் அநியாயமாய் இறந்தார்கள் என்பதை நானும் அறிவேன். நீங்களும் அறிவீர்கள்.

அதென்ன மகம்?...

பூமி அழியும் நிலை ஏற்படும் போது உயிர்களை பாது காப்பதற்காக அவற்றை ஜலமாக செய்து ஒரு கும்பத் துக்குள் போட்டு அடக்கி விட்டானாம் கடவுள். பிறகு... அக்கும்பத்தை தட்டி விட்டு அந்த ஜலப்பிரவாகம் மூலம் சிருஷ்டியை உலக உற்பத்தியைத் தொடங்கினானாம்.

உலக உற்பத்தியைத்தொடங்குகிறேன் என்று சொல்லி இத்தனை உயிர்களை மாய்க்கலாமா?...

இறுதியான சடங்கு... இறுதிச் சடங்கு. பிறப்பு முதல் என் னென்ன சடங்குகள் செய்தோம், அதற்கு என்னென்ன அர்த்தங்கள் என்பதையெல்லாம் இதுகாறும் பார்த் தோம்.

இப்போது மனிதன் இறந்துவிட்டான். பிள்ளை குட்டிக ளைப் பெற்று வளர்த்து ஆளாக்கிவிட்டு அந்த ஆலமரம் சாய்ந்து விட்டது. சுவாசத்தை உதிர்த்து விட்டது.

அவர்களை நினைத்து பித்ருக்களுக்கு சிரார்த்தம் செய் வது தப்பா? சிரார்த்தத்தின் அதாவது திவசத்தின் பலன் பித்ருக்களுக்கே போய் சேருகிறதா?... என்பதுதான் நம் முன் உள்ள கேள்விகள்.

இன்றைய தினம் பிராமணர்கள். வாழ்ந்து விட்டு இறந்து போன ஆன்மாக்கள் எங்கேயோ கண் காணாத இடத்துக்கு லோகாந்திரத்துக்கு போனால் கூட.

அவர்களை சிரார்த்தம் பண்ணி... அதன் மூலம் அவர்கள் எந்த உலகத்தில் இருந்தாலும் பிடித்து அவர்களிடம் நமது நன்றியை, படையலை சேர்ப்பித்து விடலாம் என்று சொல்கிறார்கள் பிராமணர்கள்.

இதை நம்பி மற்ற ஜாதிக்காரர்களும் நதிக்கரை சமுத்திரக்கரை போன்றவற்றில் பித்ருக்களுக்காக பிண்ட வழிபாடு நடத்துகிறார்கள்.

சிரார்த்த காண்டம் என்னும் புஸ்தகத்தில் வைத்தியநாத தீட்சிதர் எழுதுகிறார்.

"நீ சிரார்த்தத்தில் உன் அப்பாவை சொல்ஹோமம் பண்ணினால் அதனால் உண்டாகும் சக்தி... உன் அப்பாவை எத்தனையாவது ஜென்மத்தில் எந்த உலகத்தில் எந்த மூலையில் இருந்தாலும்... அங்கே போய் உன் அப்பாவை தேடிப் போய் உன் நினைவை ஒப்படைத்துவிடும்.

நீ ஹோமத்தில் கொடுக்கும் ஹவிஸ் கொஞ்சமாக இருந்தாலும் (ஹவிஸ் என்றால் ஹோமத்தின் மூலம் கிடைக்கும் புனிதப்பொருள்) உன் அப்பாவிடத்தில் போகும்போது... அன்றைய தினம் அவனது ஆகாரத்தோடு சம்பந்தப்பட்டு உன் அப்பனுக்கு பரம திருப்தியைத்தரும்.

இதனால்...

உன் அப்பா மட்டுமல்ல... அவரது முன்னோர்களும் சந்தோஷப்பட்டு உன்னையும், உன் சந்ததியையும் அனுக்

ரஹிப்பார்கள். அதனால் பித்ருக்களுக்கு சிரார்த்தம் பண்ணு"

என்கிறார் தீட்சிதர்.

பித்ரு லோகம்... சொர்க்க லோகம் என்பதெல்லாம் தனித்தனி. இறந்துபோன உன் அப்பா பித்ருக்களுக்கென உள்ள லோகமான பித்ரு லோகத்தில் இருக்கிறான் என்று ஒரு தத்துவம் சொல்கிறது. இன்னொரு தத்துவம் அவன் சொர்க்கலோகத்தில் இருப்பான் என்று கூறுகிறது.

அவன் எங்கே இருந்தாலும் நீ பிராமணன் மூலம் ஹோமம் நடத்து. அதில் பிராமணனுக்கு தட்சணை வைத்து திவசம் செய்தால் உன் அப்பா சந்தோஷமடைவார்.

என்பதுதான் இந்த தத்துவங்களின் திரட்டு.

அதற்காக அவர்களையே நினைத்துக் கொண்டிருக்காதே.

திவசத்தில் சொல்லக்கூடிய ஒரு மந்த்ரத்தை இப்போது சொல்கிறேன்.

"ரிதயே ஹசாயே
த்ராசி ஆயுஹு
ப்ரதரம் ததானஹா
ஆனந்தாய ப்ரமோதாய
புனராகாம் ஸ்-ம்..."

என்று போகும் இந்த வரிகளுக்குள் இருக்கும் கருத்து என்ன?...

"நாங்கள் இனி அழப்போவதில்லை. எங்கள் கண்களில் இருந்து இனி துளி கண்ணீரும் விழப்போவதில்லை. நீ இறந்துவிட்டதால் என்ன?... ஒன்றும் இல்லை.

இனி நாங்கள் குடும்ப வாழ்க்கையில் புகுந்து கூத்தாடிக் கொண்டு சந்தோஷத்தில் சிரித்தபடியே இருப்போம்.

என்பதுதான் இந்த மந்த்ரம் சொல்லும் செய்தி.

பத்து நாட்களில் இறந்து போனவர் தந்த துக்கத்தை துயரத்தை நாம் விட்டு விடலாம். ஆனால் அவர்களின் நினைவுகளை மறக்கக்கூடாது.

சீன தேசத்தின் மிகப்பெரும் ஞானியான கன்ஃபியூசியஸ் சொன்ன ஒரு செய்தியை இவ்விடத்திலே நான் உங்களுக்கு சொல்ல விரும்புகிறேன்.

அப்போது (கிறிஸ்து பிறப்பதற்கு பல நூறு ஆண்டுகள் முன்பு.).. சீனாவில்...

கடவுள் சொர்க்கத்தை நமக்காக படைத்து வைத்திருக் கிறான். நாம் அங்கு செல்வதற்காக கடவுளை வணங் குவோம் என மிகுந்த நம்பிக்கையில் இருந்தனர். அத னால் கடவுளுக்கு நிறைய படையல்களையும் செய்த னர்.

அப்போது கன்ஃபியூசியஸ் சொன்னார்.

கண்ணுக்குத் தெரியாத கடவுளுக்கு ஏனடா நீ இவ் வளவு பொருட்களை படைக்கிறாய். அதன் மூலம் அவற்றை நீ வீண் செய்கிறாய். கடவுள் என்ற மாயைக்கு வணக்கம் சொல்வதை விட... உயிரோடு இருக்கும் உன் அப்பாவை வணங்கு. அம்மாவை வணங்கு. அப்படி சொர்க்கம் போக வேண்டுமென்றால்

இறந்து போன உன் அம்மா, அப்பா, தாத்தா, பாட்டி என முன்னோர்களை வணங்கு. அப்போதுதான் நீ உண்மை யான சொர்க்கத்தை அடையலாம்..."

என்கிறார் கன்ஃபியூசியஸ்.

இதேபோல் ராமாயணத்தில் ராமன், பரதனிடம் சொல்கி றான்.

"ஜீவதோ வாக்ய கர்ணாது
ப்ரதயப்தம் பூரி போஜனாது
யயாயம் பிண்டதா நாச்சே
த்ரிபி புத்ரத்து மிஸ்யதீ..."

அவர் உயிரோடு இருக்கும் வரை என் அப்பா பேச்சை கேட்டேன். இனி அவரை உத்தேசித்து கர்மாக்கள் செய்யவேண்டும்..."

என்கிறார். ராமருக்கு... அப்பா மீது அவ்வளவு மரியாதை.

கர்மா எப்படி நடக்கிறது என்பதுதான் நமது கேள்வி.

"தேவானு பித்ருனு
பகலாதாதி ஆத்ம காம்தாத்யா..."

உன் அப்பன் கிட்ட கொடுக்க சொல்லி, ருத்ரா, ஆதித்யா ஆகிய ஏதாவது ஒரு தேவதைகிட்ட சொல்லிடுவேன். அவாள் போய் உன் அப்பாவை பார்த்து உன்னுடைய திவசம் பற்றி எடுத்துரைப்பார்கள். அவ்வளவுதான். தேவதை உன் அப்பாவை சரியா கண்டுபிடிச்சிடும். இது தானப்பா திவசத்தின் ஃபார்முலா.

சரி... இப்போது ஒரு மகன் தன் அம்மாவை இழந்து தவிக்கிறான். தனக்கு பால் ஊட்டியவருக்கே... பால் ஊற்றும் நிலைமைக்கு வந்துவிட்டோமே என கண்கள் அழுது அழுது பெருகுகிறது.

இதயம் உடைந்து அம்மா அம்மா என கதறுகிறது. எல்லாருக்குமே வாழ்க்கை என்பது அவர்களின் அம்மா போட்ட பிச்சை அம்மாவின் புடவையில் கட்டிய தூளியின் கட்டில்தான் சின்னக் குழந்தையில் நாம் தூங்கியிருப்போம்.

நாம் வளர வளர அதைப் பார்த்து மலர்கிறவள் தாய் மட்டும்தான்.

"ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன் மகனை
சான்றோன் எனக் கேட்ட தாய்..."என வள்ளுவரே தாய்மையின் உயர்வை... மகனை வைத்துச் சொல்கிறார்.

தாய்தான் உலகத்தின் ஆதாரம். பெருமாளின் மனைவியை கூட 'தாயார், தாயார்...' என மரியாதையாக அழைப்பவர்கள் நாம். அப்படிப்பட்டவள் தாய். இன்றும் பூமியில் எக்கச்சக்க அழுக்குகள் இருந்தாலும்... ஒவ்வொரு தாய் உருவாகும்போதும் மீண்டும் மீண்டும் புனிதமாகிக் கொண்டே வருகிறது பூமி.

அப்பேர்ப்பட்ட தாயை இழப்பதே எவ்வளவு பெரிய துன்பம்? அந்தத் துன்பத்தை தணித்துக்கொள்வதற்காக... தாய்க்கு திவசம் செய்யப் போகிறான் ஒரு பாமரன்.

அப்போது புரோகிதன் சொல்கிறான்.

"என்மே மாதா ப்ரவது லோபசரதி
அன்னவ் வ்ரதா தன்மே ரேதஹா
பிதா வ்ருந்த்ததாம் ஆபுரண்யஹா அவபத்ய நாம..."

"எங்க அம்மா ராத்திரி வேலைகள்ல யார்கிட்ட படுத்துக் கொண்டு என்னைப் பெற்றாளோ தெரியாது. ஆனால்... நான் ஒரு உத்தேச நம்பிக்கையில்தான் அவளை என் அப்பாவின் மனைவியாகக் கருதுகிறேன். அவளுக்கு என் சிரார்த்தத்தை செய்கிறேன்..."

என்பதுதான் அந்த மந்த்ரத்தின் அர்த்தம். உன் தாயை உன் கண்முன்னே நடத்தை கெட்டவள் என சொல்வதுதான்... அதையும் உன்னை வைத்தே மறுபடி உச்சரிக்க வைப்பதுதான் இந்த மந்த்ரத்தின் நோக்கம்.

இப்படிப்பட்டதுதான் இறுதிச் சடங்கு.

நேருஜி இறந்தபோது கவிச்சக்கரவர்த்தி கண்ணதாசன் "சாவே உனக்கொரு நாள் சாவு வந்து சேராதா?...", "தீயே உனக்கொரு நாள் தீ மூட்டிப்பாரோமோ..." என்று கேட்டான்.

அதே போல அம்மாக்களை இழிவுபடுத்தும் இறுதிச் சடங்கே உனக்கொரு நாள் இறுதிச்சடங்கு செய்ய மாட்டோமா?...

சர்வம் மங்களம் ஆகட்டும்!

******